சிவமயம்.

# திருக்கேதீச்சுவரத்

# தேவாரப்பதிகங்களும்

அவற்றின் பொழிப்புரையும்

வடமொழியிலுள்ள

# ஸ்ரீ கேதீச்சுவரக்ஷேத்திர

வைபவமும்

தமிழ் மொழிபெயர்ப்பும்.

யாழ்ப்பாணம் கந்தரோடை

பிரம்மஸ்ரீ. க. ச. வைத்தியநாத

சாஸ்திரிகள்

அவர்களால்

சங்கிரகித்து மொழிபெயர்த்து

கொழும்பு நாட்டுக்கோட்டை

நகரத்தாருடைய

கேள்வியும் பொருளுதவியுங் கொண்டு

நாவலர் அச்சுக்கூடத்திலே

முத்திரீகரணமாயின.

சித்தார்த்தி௵ வைகாசி௴

# நான்முகம்.

---:*:---

இவ்விலங்காதீபம் ஆயிரத்தெட்டு சிவஸ்தலங்களும், நூற்றெட்டு விஷ்ணுஸ்தலங்களும், விநாயகர் சுப்பிரமணியர் வைரவர் ஐயனார் துர்க்கை காளி முதலியதேவர்களுக்குரிய பலதலங்களும் பொருந்தியிருக்கின்றதென்று தக்ஷிணகைலாச மான்மியத்திலே கூறப்பெற்றுள்ளது. அத்தலங்களுள் கோணேஶ்வரம் திருக்கேதீஶ்வரம் முனீஶ்வரம் கரசை (கங்குவேலி) சிவனொளி பாதம் கதிர்காமமென்பன மிகவிரிவாகக் கூறப்பெற்றிருக்கின்றன. மேலுமிவ்விலங்காதேயம் அகிலேஶ்வரம் முதலிய அனேக சிவஸ்தலங்களைக் கொண்டுள்ளதென்று மகா சிவபுராணத்திலே சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விலங்காபுரியின்மஹாத்மியம் முதனூல்களாகிய ஸ்ரீமத் வால்மீகிராமாயணத்திலும், ஸ்ரீ ஸ்காந்தபுராணத்திலும் மிகவியந்து கூறப்படுகிறது.

தவிரவும், திருமூலநாயனாராலருளிச் செய்யப்பட்ட திருமந்திரத்திலே சிவபெருமான விஶ்வரூபங்கொண்டவமயத்து இடை பிங்கலை சுழுமுனை என்னுநாடிகளைமுறையே இலங்கை இமயம் தில்லை என்னுமிடங்களிலேநிறுவினரென்றும் அதனாலே இம்மூன்றும் மிகப்புனிதமாயினவென்றும்சிவபூமியென்றும் தெளிவாகத்தெரியவிருக்கிறது. இவ்வீழநாடு சிலபெரிய தத்துவங்களைக்கொண்டிருப்பது மிதனாலேயாம். இன்னும், பாரதமாதாவின்மூக்கணிபோன்ற இவ்வீழமண்டலமானது பலமகிமைகளுமுடையதாகவிருந்ததெனபதற்குச் சமயகுரவர்நால்வரும் பாடியபாடல்களுள் தற்காலமகப்பட்டுள்ள திருஞானசம்பந்தஸ்வாமிகள் தேவாரப்பதிகமும், ஸ்ரீமத சுந்தரமூர்த்திஸ்வாமிகள்தேவாரப்பதிகமுமே போதியசான்றாகும். ஆகவே இத்து[illegible] று
ப்புவாய்ந்த இலங்காபுரியின் வடமேற்பாகத்திலே சமுத்[illegible]

திருச்சிற்றம்பலம்.

# திருஞானசம்பந்தஸ்வாமிகளால் அருளிச்செய்யப்பட்ட திருக்கேதீச்சுவரத் தேவாரப்பதிகம்.

---

**பண்-நட்டராகம்.**

விருது குன்றமா மேருவி னாணர வாவன லரியம்பாப் [ங்
பொருத மூவெயில் செற்றவன் பற்றிநின் றுறைபதி யெந்நாளுங்
கருது கின்றவூர் கனைகடற் கடிகமழ் பொழிலணி மாதோட்டங்
கருதி நின்றகே தீச்சரங் கைதொழக் கடுவினை யடையாவே.

க. முப்புரத்திலுள்ள அவுணர்களது தவவலிகெட மகாமேருவை வில்லாகவும், ஆதிசேஷனை வின் நாணாகவும், மகாவிஷ்ணுவை அம்பாகவும், அக்கினியை அம்பின் நுனியாகவுங் கொண்டு போர்செய்து அவர்களை அழித்த திரிநேத்திரர் விரும்பி எந்தக்காலமும் இருக்கும் இடம்; முழங்குகின்ற (கோலப்பூ) கடலையும், வாசனையையுடைய சோலையையும் அடுக்கு அலங்காரங்களாகவுடைய மாதோட்டத்திலே, யாவராலுஞ் சிந்திக்கப்படுவதும் பக்கமாகியுமுள்ள திருக்கேதீச்சுரம். அதனைக் கைகூப்பி வணங்கக் கொடியவினைசேரா.

இது அதிதூரவணக்கங் கூறியது.

பாடல் வீணையர் பலபல சரிதைய ரெருதுகைத் தருநட்ட
மாடல் பேணுவ ரமரர்கள் வேண்டநஞ் சுண்டிருள் கண்டத்த
ரீட மாவது விருங்கடற் கரையினி லெழிறிகழ் மாதோட்டங்
கேடி லாதகே தீச்சரந் தொழுதெழக் கெடுமிடர் வினைதானே.

உ. பாடுகின்ற வீணையையுடையவர், பல ஒழுக்கங்களையுடையவர், இடபத்திலேறிந்து திருநடனத்தை விரும்புகின்றவர், தேவர்கள் வேண்ட நஞ்சையுண்டு கறுத்தகண்டத்தையுடையவர், அவரது இடமானதுபெரிய கடற்கரையிலே அழகுவிளங்குகின்ற மாதோட்டத்திலேயுள்ள கே

ந்நிலையுடையார் திருக்கேதீச்சரம்; அதை நமஸ்காரஞ் செய்து எழு ஆபத்து வினை இரண்டும் நாம் நீங்கப்பெறலாம். இது நமஸ்காரம் கூறியது.

பெண்ணொர் பாகத்தர் பிறைதவழ் சடையின ரறைகழல் சிலம்பார்க்கச், சுண்ணமாதரித் தாடுவர் பாடுவ ரகந்தொறு மிடுபிச்சைக், குண்ணலாவதோ ரிச்சையி னுழல்பவ ருயர்தரு மாதோட்டத், தண்ணனண்ணுகே தீச்சர மடைபவர்க் கருவினை யடையாவே.

௩. பக்கத்திலே (கன்மலையாகிய) சத்தியையுடையவர், சந்திரன் செல்லும் சடையினையுடையவர், பாதங்களிலே வீரக்கழலும் சிலம்பும் ஒலிக்க விபூதியைத் தரித்து ஆடுகின்றவர், பாடுகின்றவர், இடங்கடோறும் இடுகின்ற பிச்சையை உண்ணுகின்ற ஞானத்தினுல் திரிகின்றவர், உயர்ந்த விருக்ஷங்களையுடைய மாதோட்டத்துப்பிதா. அவரிருக்கின்ற திருக்கேதீச்சுரத்தை அடைகின்றவர்களை பொல்லா வினையடையாது.

இது செல்லுதல் கூறியது.

பொடிகொண் மேனியர் புலியத ளரையினர் விரிதரு கரத்தேந்தும், வடிகொண் மூவிலை வேலினர் நூலினர் மறிகடன் மாதோட்டத், தடிக ளாதரித் திருந்தகே தீச்சரம் பரிந்தசிந் தையராகி, முடிகள் சாய்த்தடி பேணவல் லார்தம்மேன் மொய்த்தெழும் வினைபோமே.

௪. விபூதியணிந்த திருமேனியையுடையவர், புலித்தோலை அரையிலுடுத்தவர், கையிலேந்துகின்ற விரிந்தகூரிய மூன்று தலைகளையுடைய சூலத்தையுடையவர், உபவீதத்தையுடையவர், கடலாற் காவலையுடைய (இலங்கையிலே) மாதோட்டத்துள்ள அடியவர்களாற் பூசிக்கப்படும் [பெருமைபொருந்திய வாயுதேவனுற்றுபித்துப் பூசிக்கப்பட்டவரென்றும், ஆன்மாக்களுக்கு ஐஸ்வரியத்தையருளுந் தலைவரென்றும் பொருள்களையுடைய] திருக்கேதீஸ்வரலிங்கத்தை அன்புகொண்ட மனத்தையுடையவராகித்தலைகளைச் சாய்த்து அப்பெருமானது பாதங்களை வணங்க வல்ல ஞானிகள்மேல் திரண்டெழுகின்ற வினைகள்போம். அல்லார்க்குச் செல்லாதெனவும்பொருள்.

இது தியானங் கூறியது.

நல்ல ராற்றவு ஞானநன் குடையர்தம் மடைந்தவர்க் கருளீய, வல்லர் பார்மிசை வான்பிறப் பிறப்பிலர் மலிகடன் மா

தோட்டத், தெல்லை யில்புக ழெந்தைகே தீச்சர மிராப்பக னி
னைந்தேத்தி, யல்ல லாசறுத் தரனடி யிணைதொழு மன்பரா
மடியாரே.

ரு. பெருங்கடலாற் சூழ்ந்த இலங்கையிலே அளவில்லாத புகழை
யுடையமாதோட்டத்து எமதுகடவுள்கோயில்கொண்டருளிய திருக்கேதீ
சசுரத்தை இரவும்பகலும் நினைத்துத் துதித்து, தமக்குடைய துக்கங்களை
முழுதுங் கெடுத்து அப்பெருமானது பாதங்களைப் பூசித்து நமஸ்கரிக்
கின்ற அன்பினையுடைய அடியவர்களே மிகவும் நல்லர், மிகவும் ஞானத்
தையுடையவர், தம்மை அடைந்தவர்களுக்கு அருளைச்செய்யவும் வல்லவர்,
பெரிதாகிய பிறப்பும் இறப்பும் இல்லாதவர். இது மாதோட்டத்திலே
யுள்ள திருக்கேதீச்சுரத்தை யடைந்து தியானித்தல் தெரிசித்தல் பூசித்
தல் முதலியவைகளைச் செய்து தங்கள் துக்கங்களை நீக்குகின்ற அடிய
வர் பெருமைகூறப்பட்டது.

பேழை வார்சடைப் பெருந்திரு மகடனைப் பொருந்தவை
த் தொருபாக, மாழை யங்கயற் கண்ணிபா லருளிய பொரு
ளினர் குடிவாழ்க்கை, வாழை யம்பொழின் மந்திகள் களிப்பு
ற மருவிய மாதோட்டங், கேழல் வெண்மருப் பணிந்தநீண்
மார்பர்கே தீச்சரம் பிரியாரே.

சு. பெட்டிபோன்ற நெடிய சடாமுடியிலே பெரிய கங்கையைப்
பொருந்தும்படி வைத்து ஒருபாகத்தை யக்க அழகினையுடைய கயல
மற்சம்போன்ற கண்களையுடைய உமாதேவிக்குக் கொடுத்த கொள்கை
யையுடையவர், விஷ்ணுவாகிய பன்றியினது கொம்பையணிந்த மார்பினை
யுடையவர், அவரிருக்கின்றது வாழைச்சோலைகளிலே மந்தியினங்கள்
மகிழ்ச்சிபெருக இருக்கின்ற மாதோட்டத்திலுள்ள திருக்கேதீச்சரமென
னும் தலம் அதை ஒருகாலத்தும் பிரியார். இது தலத்தின் பெருமை
களும் தலைவன் பெருமையும் பிரியாமையுங் கூறப்பட்டது.

பண்டு நால்வருக் கறமுரைத் தருளிப்பல் லுலகினி லுயிர்
வாழ்க்கை, கண்ட நாதனார் கடலிடங் கைதொழக் காதலித்
துறைகோயில், வண்டு பண்செயு மாமலர்ப் பொழின் மஞ்ஞை
நடமிடு மாதோட்டந், தொண்டர் நாடொறுந் துதிசெய வரு
ள்செய்கே தீச்சர மதுதானே.

எ. முற்காலத்தில் சனகாதி நான்கு முனிவர்களுக்குச்சரியை கிரி
யை யோகம் ஞானமாகிய ஆன்மார்த்த தருமங்களை உபதேசித்து பல

வுலகங்களிலுமுள்ள ஆன்மாக்கள் அனைவரையும் மேற்கொண்டொழுகும்படி செய்த நாதன், உலகத்துள்ளார் வணங்க வீற்றிருக்கும் மருதநிலம் தேவாலயம், அது வண்டு பண்ணினைச் செய்யும் பூஞ்சோலைகளிலே மயில்கள் கூத்தாடுகின்ற மாதோட்டநகரத்துள்ள அடியவர்கள் நாடோறும் தோத்திரஞ்செய்ய அவர்களுக்குத் திருவருள் செய்யும் திருக்கேதீச்சரமென்னுந் தானமாம். இது உலகத்துள்ளார் வணக்கங் கூறியது.

தென்னி லங்கையர் குலபதி மலைநலிந் தெடுத்தவன் முடி திண்டோ, டன்ன லங்கெட வடர்த்தவற் கருள்செய்த தலைவ ஞர் கடல்வாயப், பொன்னி லங்கிய முத்துமா மணிகளும் பொருந்திய மாதோட்டத், துன்னி யன்பொடு மடியவ ரிறைஞ்சு கேதீச்சரத் த்துள்ளாரே.

அ. தெற்கின்கணுள்ள இலங்கை அரக்கர்களுக்கு அரசனாகிய இராவணன், பக்கத்திலேயுள்ள தக்ஷிணகைலாயத்தை வெட்டி வருந்தி எடுத்தகாலத்தில் அவனது தலைகளும் வலியபுயங்களும் தத்தம் நிலைகெட நெரித்துப் பின் அவன் வேண்டுதல்செய்ய அருள்புரிந்த முதல்வர், பொன்னும் கடலின்கணுள்ள முத்து மாணிக்க முதலிய இரத்தினங்களும் பொருந்திய சேதுமத்தியத்தானமாகிய மாதோட்டத்துள்ள அடியவர்கள் சிந்தாத்தியானஞ் செய்து வணங்குகின்ற தாவரலிங்க வடிவமாயும் மூர்த்தி தல தீர்த்தங்களாயுமுள்ள கடவுள் அவரே. இது இராவணன் தவவலி கைலாயம் மாதோட்டம் திருக்கேதீச்சரம் இவைகளின் பெருமை பாராட்டப்பட்டது.

பூவு ளானுமப் பொருகடல் வண்ணனும் புவியிடந் தெழுந்தோடி, மேவி நாடிநின் னடியிணை காண்கிலா வித்தக மென்னாகும், மாவும் பூகமுங் கதலியு நெருங்குமா தோட்டநன் னகர்மன்னித், தேவி தன்னொடுந் திருந்துகே தீச்சரத் திருந்தவெம் பெருமானே.

கூ. பிரமாவும் விஷ்ணுவும் மேலேசென்றும் பூமியைக்கிழித்தும் அன்னமும் பன்றியுமாய்த் தேடிப்பார்த்து நமது முடியையும் அடியையும் காணுகின்றிலர். மாமரங்களும் கமுகுகளும் வாழைகளும் (பிறவும்) நெருங்கிய மகாதுவட்டாபுரத்திலே நல்லநகரத்திலே கௌரியம்மையாரோடு கூடி சராசரவஸ்துவாகி இருக்கின்ற எமது கடவுளே அவர்களுடைய ஞானம் எவ்வாறாகும். இது பிரம விஷ்ணு சிறுமையும் திருக்கேதீச்சரத்தலத்தின் பெருமையும் கூறப்பட்டது.

புத்த ராய்ச்சில புனைதுகி லுடையவர் புறனுரைச் சமணா தர், எத்த ராகிநின் றுண்பவ ரியம்பிய வேழைமை கேளேன்மி ன், மத்த யானையை மறுகிட வுரிசெய்து போர்த்தவர் மாதோ ட்டத், தத்தர் மன்னுபா லாவியின் கரையிற்கே தீச்சுர மடை மின்னே.

க0. பக்தர்களே துவர்நிறமுடைய கிழித்துத்தைத்த வஸ்திரத்தை அணிபவர்களும் பலரைப் புறங்கூறி வஞ்சித்துநின்று புசிப்பவருமாகிய சமணர்கள், போதிக்கின்ற அறியாமையாகிய மூடபுத்தியைக் கேளாதொழியுங்கள், கஜேந்திரனென்னும் யானையை அஞ்சும்படி யுரித்துப்போர்த்தவர், மாதோட்டத்திலுள்ள பரமபிதா, அவர் வீற்றிருக்கின்ற பாலாவிக் கரையிலுள்ள திருக்கேதீச்சுரத்தை அடையுங்கள்.

மாடெ லாமண முரசெனக் கடலின தொலிகவர் மாதோ ட்டத், தாட லேறுடை யண்ணல்கே தீச்சுரத் தடிகளை யணி காழி, நாடு ளார்க்கிறை ஞானசம் பந்தன்சொன் னவின்றெழு பாமாலை, பாட லாயின பாடுமின் பத்தர்காள் பரகதி பெற லாமே.

கக. பக்கங்களிலெல்லாம் மணமுரசைப்போலச் சமுத்திரவோசையானது பிறவோசைகளையடக்கும் மாதோட்டநகரத்துள்ள இடபாரூடராகிய சிவபெருமான் வீற்றிருக்கும் திருக்கேதீச்சுரம் அப்பெருமானை அழகிய சீர்காழி நாட்டுள்ளார்க்குத் தலைவன் திருஞானசம்பந்தமூர்த்தி அவர்பாடிய இப்பதிகத்தையே பாடுங்கள் பக்தர்காள்! ஈசுவர சாந்நித்தியமடையலாம்.

சுவாமிபெயர்—கேதீஸ்வரர். தேவியார்—கௌரிநாயகியம்மை.

திருச்சிற்றம்பலம்.

---

## ஸ்ரீ. சுந்தரமூர்த்திஸ்வாமிகள் தேவாரம்.

பண்--நஷ்டபாஷை

நத்தார் 1படை ஞானன்பசு வேறிநனை கவுள்வாய்
மத்தம்மத யானையுரி போர்த்த 2மண வாளன்
பத்தாகிய தொண்டர்தொழு பாலாவியின் கரைமேற்
செத்தாரெலும் பணிவான்றிருக் கேதீச்சுரத் தானே.

---

1. புடையென்றும், 2-மழுவாளனென்றும் பாடமுண்டு.

௧. கொல்லாமையையும் பொறுமையையும் சத்தியம் பேசுதலையும் பழிக்கஞ்சுதலையும் அன்பினையும் மனவொடுக்கத்தினையும் தருமத்தினையும் சிவபூசையையும் தேகத்தினை வெறுத்த தவத்தினையும் குருவினாற் சொல்லப்படும் சிவஞானத்தையுமுடைய அடியவர்களால் வணங்கப்பெற்றுப் பாலாவியின் கரையிலேயுள்ள திருக்கேதீச்சரத்தையுடையவர், சங்குமுதலிய பஞ்சாயுதங்களைத் தரித்த விஷ்ணுவென்னு மிடபத்திலேறினவர், மதத்தால் நனைகின்ற கதுப்புப்பொருந்திய வாயையுடைய யானைத்தோலை யுரித்துப் போர்த்த நித்தியகல்யாணர், இறந்த விஷ்ணுமுதலியோர்களுடைய என்புமாலைகளை அணிபவருமாவர்.

சுடுவார்பொடி நீறுநல துண்டப்பிறைக் கீறுங்
கடமார்களி யானையுரி யணிந்தகறைக் கண்டன்
பட்டேரிடை மடவாளொடு பாலாவியின் கரைமேற்
றிடமாயுறை கின்றான்றிருக் கேதீச்சரத் தானே.

௨. சுடலையிற் சுடப்பெற்ற நீற்றையும் ஞானசந்திரனையுங் கிழித்த யானைத்தோலையுமணியப்பட்டவர், நீலகண்டர், கீழ்நிலை நீராயுள்ள பாலாவியின் கரை மேற்கில் சேடனது படத்தினால் மறைப்புற்று வாடையாற்றகர்ந்துத்தாபித்த மகாமேருசிகர மத்தியிலுள்ள திருக்கேதீச்சரத்திலே கௌரியம்மையாரோடு மகாதேவர் நிச்சயமாயிருக்கின்றார்.

அங்கம்மொழி யன்னாரவ ரமரர்தொழு தேத்த
வங்கம்மலி கின்றகடன் மாதோட்டநன் னகரிற்
பங்கஞ்செய்த பிறைசூடினன் பாலாவியின் கரைமேற்
செங்கண்ணர வசைத்தான்றிருக் கேதீச்சரத் தானே.

௩. அரூபிகளாகிய தேவஅன்னையர்களும் தேவர்களும் தொழுது துதிக்க மரக்கலம் மிகுந்துள்ள கடலாற்சூழப்பட்ட மாதோட்டநகரத்திலேயுள்ள பாலாவித் தீர்த்தக்கரையிலே, பாதிப்பிறையையும், சிவந்த கண்களையுடைய சர்ப்பக்கச்சையையுமணிந்த சாம்பமூர்த்தியாகிய கடவுள் வேண்டுவார் வேண்டுவதையீயுந்தலமாய்க் கொண்டெழுந்தருளியிருக்கின்றார்.

கரியகறைக் கண்டன்னல கண்மேலொரு கண்ணான்
வரியசிறை வண்டியாழ்செயு மாதோட்டநன் னகரிற்
பரியதிரை யெறியாவரு பாலாவியின் கரைமேற்
றெரியுமறை வல்லான்றிருக் கேதீச்சரத் தானே.

உ

# நூன்முகம்.



இவ்விலங்காதீபம் ஆயிரத்தெட்டு சிவஸ்தலங்களும், நூற்றெட்டு விஷ்ணுஸ்தலங்களும், விநாயகர் சுப்பிரமணியர் வைரவர் ஐயனூர் துர்க்கை காளி முதலியதேவர்களுக்குரிய பலதலங்களும் பொருந்தியிருக்கின்றதென்று தக்ஷிணகைலாச மான்மியத்திலே கூறப்பெற்றுள்ளது. அத்தலங்களுள் கோணேசுவரம் திருக்கேதீஸ்வரம் முனீஸ்வரம் கரசை (கங்குவேலி) சிவனொளிபாதம் கதிர்காம மென்பன மிகவிரிவாகக் கூறப்பெற்றிருக்கின்றன. மேலுமிவ்விலங்காதேயம் அகிலேஸ்வரம் முதலிய அனேக சிவஸ்தலங்களைக் கொண்டுள்ளதென்று மகா சிவபுராணத்திலே சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விலங்காபுரியின்மஹாத்மியம் முதனூல்களாகிய ஸ்ரீமத் வால்மீகிராமாயணத்திலும், ஸ்ரீ ஸ்காந்தபுராணத்திலும் மிகவியந்து கூறப்படுகிறது.

தவிரவும், திருமூலநாயனாரால ருளிச் செய்யப்பட்ட திருமந்திரத்திலே சிவபெருமான விஸ்வரூபங்கொண்டவமயத்து இடை பிங்கலை சுழுமுனை என்னுநாடிகளைமுறையே இலங்கை இமயம் தில்லை என்னுமிடங்களிலேநிறுவினரென்றும் அதனாலே இம்மூன்றும் மிகப்புனிதமாயினவென்றும்சிவபூமியென்றும் தெளிவாகத்தெரியவிருக்கிறது. இவ்வீழநாடு சிலபெரிய தத்துவங்களைக்கொண்டிருப்பது மிதனாலேயாம். இன்னும், பாரதமாதர்வின்மூக்கணிபோன்ற இவ்வீழமண்டலமானது பலமகிமைகளுமுடையதாகவிருந்ததெனபதற்குச் சமயகுரவர்நால்வரும் பாடியபாடல்களுள் தற்காலமகப்பட்டுள்ள திருஞானசம்பந்தஸ்வாமிகள் தேவாரப்பதிகமும், ஸ்ரீமத சுந்தரமூர்த்திஸ்வாமிகள்தேவாரப்பதிகமுமே போதியசான்றுகும். ஆகவே இத்து[illegible]றப்புவாய்ந்த இலங்காபுரியின் வடமேற்பாகத்திலே சமுத்[illegible]ரே

த்திலேயுள்ள திருக்கேதீஸ்வரக்ஷேத்திரத்தின் மூர்த்தி தல தீர்த்த விசேடங்களை முறையாக எழுதி அச்சிட்டுப் பிரசித்தஞ் செய்யவேண்டியதாவசியகமாயிற்று. அதனைச் சிந்தித்து சத்தியம் நேர்மை தயை தாக்ஷிண்யம் தருமசிந்தனை தேவதா பக்தி பிராமணவிசுவாசம் எடுத்தகாரியத்தைச் செவ்வையாக நடத்துந்திறமை முதலிய நற்குணநற்செய்கைகள் பொருந்திய நாட்டுக்கோட்டை நகரத்தாருடைய விருப்பமும் பொருளுபகாரமுங் கொண்டிதனைச் சங்கிரகித்தெழுதிச் சர்வோபகாரமாக வெளிப்படுத்தலாயினோம்.

க. ச. வை.

உ

திருச்சிற்றம்பலம்.

# திருஞானசம்பந்தசுவாமிகளால் அருளிச்செய்யப்பட்ட திருக்கேதீச்சுவரத் தேவாரப்பதிகம்.

பண்-நட்டராகம்.

விருது குன்றமா மேருவி னாணர வாவன லரியம்பாப் [ங்
பொருத மூவெயில் செற்றவன் பற்றிநின் றுறைபதி யெந்நாளுங்
கருது கின்றவூர் கனைகடற் கடிகமழ் பொழிலணி மாதோட்டங்
கருதி நின்றகே தீச்சரங் கைதொழக் கடுவினை யடையாவே.

க. முப்புரத்திலுள்ள அவுணர்களது வலிகெட மகாமேருவை வில்லாகவும், ஆதிசேஷனை வில் நாணாகவும், மகாவிஷ்ணுவை அம்பாகவும், அக்கினியை அம்பின் நுனியாகவும் கொண்டு போர் செய்து அவற்றை அழித்த திரிநேத்திரர் விரும்பி எந்தக்காலமும் இருக்கும் இடம்; முழங்குகின்ற (கோலப்பூ) கடலையும், வாசனையையுடைய சோலையையும் அடுக்கு அலங்காரங்களாகவுடைய மாதோட்டத்திலே, யாவராலுஞ் சிந்திக்கப்படுவதும் பக்கமாகியுமுள்ள திருக்கேதீச்சரம். அதனைக் கைகூப்பி வணங்கக் கொடியவினைசேரா.

இது அதிதுரவணக்கங் கூறியது.

பாடல் வீணையர் பலபல சரிதைய ரெருதுகைத் தருநட்ட
மாடல் பேணுவ ரமரர்கள் வேண்டநஞ் சுண்டிருள் கண்டத்த
ரீடு மாவது விருங்கடற் கரையினி லெழிறிகழ் மாதோட்டங்
கேடி லாதகே தீச்சரந் தொழுதெழக் கெடுமிடர் வினைதானே.

உ. பாடுகின்ற வீணையையுடையவர், பல ஒழுக்கங்களையுடையவர், இடபத்திலேறிந்து திருநடனத்தை விரும்புகின்றவர், தேவர்கள் வேண்ட நஞ்சையுண்டு கறுத்தகண்டத்தையுடையவர், அவரது இடமானது பெரிய கடற்கரையிலே அழகுவிளங்குகின்ற மாதோட்டத்திலேயுள்ள கெ

நிலையுடையார்க திருக்கேதீச்சரமாகும்; அதை நமஸ்காரஞ் செய்கின்ற வர்களது ஆபத்து வினை இரண்டும் நாசமாகும். இது நமஸ்காரம் கூறியது.

பெண்ணொர் பாகத்தர் பிறைதவழ் சடையின ரறைகழல் சிலம்பார்க்கச், சுண்ணமாதரித் தாடுவர் பாடுவ ரகந்தொறு மிடுபிச்சைக், குண்ணலாவதோ ரிச்சையி னுழல்பவ ருயர்ந்த மாதோட்டத், தண்ணலாண்மைசெய் கேதீச்சர மடைபவர்க் கருவினை யடையாவே.

ங. பக்கத்திலே (உண்மையாகிய) சக்தியையுடையவர், சந்திரன் செல்லும் சடையினையுடையவர், பாதங்களிலே வீரக்கழலும் சிலம்பும் ஒலிக்க விபூதியைத் தரித்து ஆடுகின்றவர், பாடுகின்றவர், இடங்கடோறும் இடுகின்ற பிச்சையை உண்ணுகின்ற ஞானத்தினால் திரிகின்றவர், உயர்ந்த விருக்ஷங்களையுடைய மாதோட்டத்துப்பிதா அவரிருக்கின்ற திருக்கேதீச்சரத்தை அடைகின்றவர்களை பொல்லா வினையடையாது.

இது செல்லுதல் கூறியது.

பொடிகொண் மேனியர் புலியத ளரையினர் விரிதரு கரத்தேந்தும், வடிகொண் மூவிலை வேலினர் நூலினர் மறிகடன் மாதோட்டத், தடிகளாதரித் திருந்தகே தீச்சரம் பரிந்துசிந் தையராகி, முடிகள் சாய்த்தடி பேணவல் லார்தம்மேன் மொய்த்தெழும் வினைபோமே.

ச. விபூதியணிந்த திருமேனியையுடையவர், புலித்தோலை அரையிலுடுத்தவர், கையிலேந்துகின்ற விரிந்தகூரிய மூன்று தலைகளையுடைய சூலத்தையுடையவர், உபவீதத்தையுடையவர், கடலாற் காவலையுடைய (இலங்கையிலே) மாதோட்டத்துள்ள அடியவர்களாற் பூசிக்கப்படும் [பெருமைபொருந்திய வாயுதேவனுற்றுமபித்துப் பூசிக்கப்பட்டவரென்றும், ஆன்மாக்களுக்கு ஐஸ்வரியத்தையருளுந் தலைவரென்றும் பொருள்களையுடைய] திருக்கேதீஸ்வரலிங்கத்தை அன்புகொண்ட மனத்தையுடையவராகித்தலைகளைச் சாய்த்து அப்பெருமானது பாதங்களை வணங்க வல்ல ஞானிகள்மேல் திரண்டெழுகின்ற வினைகள்போம். அல்லார்க்குச் செல்லாதெனவும்பொருள்.

இது தியானங் கூறியது.

நல்ல ராற்றவு ஞானநன் குடையர்தம் மடைந்தவர்க் கருளிய, வல்லல் பார்மிசை வான்பிறப் பிறப்பிலர் மலிகடன் மா

தோட்டத், தெல்லையில்புக ழெந்தைகே தீச்சுர மிராப்பக னினைந்தேத்தி, யல்ல லாசறுத் தரன்டி யிணைதொழு மன்பரா மடியாரே.

௫. பெருங்கடலாற் சூழ்ந்த இலங்கையிலே அளவில்லாத புகழை யுடையமாதோட்டத்து எமதுகடவுள்கோயில்கொண்டருளிய திருக்கேதீச்சுரத்தை இரவும்பகலும் நினைத்துத் துதித்து, தமக்குடைய துக்கங்களை முழுதுங் கெடுத்து அப்பெருமானது பாதங்களைப் பூசித்து நமஸ்கரிக்கின்ற அன்பினையுடைய அடியவர்களே மிகவும் நல்லர், மிகவும் ஞானத்தையுடையவர், தம்மை அடைந்தவர்களுக்கு அருளைச்செய்யவும் வல்லவர், பெரிதாகிய பிறப்பும் இறப்பும் இல்லாதவர். இது மாதோட்டத்திலேயுள்ள திருக்கேதீச்சுரத்தை யடைந்து தியானித்தல் தெரிசித்தல் பூசித்தல் முதலியவைகளைச் செய்து தங்கள் துக்கங்களை நீக்குகின்ற அடியவர் பெருமைகூறப்பட்டது.

பேழை வார்சடைப் பெருந்திரு மகடனைப் பொருந்தவைத் தொருபாக, மாழை யங்கயற் கண்ணிபா லருளிய பொருளினர் குடிவாழ்க்கை, வாழை யம்பொழின் மந்திகள் களிப்புற மருவிய மாதோட்டங், கேழல் வெண்மருப் பணிந்தநீண் மார்பர்கே தீச்சுரம் பிரியாரே.

௬. பெட்டிபோன்ற நெடிய சடாமுடியிலே பெரிய கங்கையைப் பொருந்தும்படி வைத்து ஒருபாகத்தை யிக்க அழகினையுடைய கயல் மற்சம்போன்ற கண்களையுடைய உமாதேவிக்குக் கொடுத்த கொள்கையையுடையவர், விஷ்ணுவாகிய பன்றியினது கொம்பையணிந்த மார்பினையுடையவர், அவரிருக்கின்றது வாழைச்சோலைகளிலே மந்தியினங்கள் மகிழ்ச்சிபெருக இருக்கின்ற மாதோட்டத்திலுள்ள திருக்கேதீச்சுரமென்னுந் தலம் அதை ஒருகாலத்தும் பிரியார். இது தலத்தின் பெருமைகளும் தலைவன் பெருமையும் பிரியாமையுங் கூறப்பட்டது.

பண்டு நால்வருக் கறமுரைத் தருளிப்பல் லுலகினி லுயிர் வாழ்க்கை, கண்ட நாதனார் கடலிடங் கைதொழக் காதலித் துறைகோயில், வண்டு பண்செயு மாமலர்ப் பொழின் மஞ்ஞை நடமிடு மாதோட்டந், தொண்டர் நாடொறுந் துதிசெய வருள்செய்கே தீச்சுர மதுதானே.

௭. முற்காலத்தில் சனகாதி நான்கு முனிவர்களுக்குச்சரியை கிரியை யோகம் ஞானமாகிய ஆன்மார்த்த தருமங்களை உபதேசித்து பல

வுலகங்களிலுமுள்ள ஆன்மாக்கள் அவைகளைமேற்கொண்டொழுகும்படி செய்த நாதன், உலகத்துள்ளார் வணங்க வீற்றிருக்கும் மருந்தலம் தேவாலயம், அது வண்டு பண்ணைச் செய்யும் பூஞ்சோலைகளிலே மயில்கள் கூத்தாடுகின்ற மாதோட்டநகரத்துள்ள அடியவர்கள் நாடோறும் தோத்திரஞ்செய்ய அவர்களுக்குத் திருவருள் செய்யும் திருக்கேதீச்சரமென்னுந் தானமாம். இது உலகத்துள்ளார் வணக்கங் கூறியது.

தென்னிலங்கையர் குலபதி மலைநலிந் தெடுத்தவன் முடிதிண்டோ, டன்னவன்கெட வடர்த்தவற் கருள்செய்த தலைவனூர் கடல்வாயப், பொன்னி லங்கிய முத்துமா மணிகளும்பொருந்திய மாதோட்டத், துன்னி யன்பொடு மடியவ ரிறைஞ்சு கேதீச்சரத் துள்ளாரே.

அ. தெற்கின்கணுள்ள இலங்கை அரக்கர்களுக்கு அரசனாகிய இராவணன், பக்கத்திலேயுள்ள தக்ஷிணகைலாயத்தை வெட்டி வருந்தி எடுத்தகாலத்தில் அவனது தலைகளும் வலியபுயங்களும் தத்தம் நிலைகெட நெரித்துப் பின் அவன் வேண்டுதல்செய்ய அருள்புரிந்த முதல்வர், பொன்னும் கடலின்கணுள்ள முத்து மாணிக்க முதலிய இரத்தினங்களும் பொருந்திய சேதுமத்தியத்தானமாகிய மாதோட்டத்துள்ள அடியவர்கள் சிந்தாத்தியானஞ் செய்து வணங்குகின்ற தாவரலிங்க வடிவமாயும் மூர்த்தி தல தீர்த்தங்களாயுமுள்ள கடவுள் அவரே. இது இராவணன் தலைவலி கைலாயம் மாதோட்டம் திருக்கேதீச்சரம் இவைகளின் பெருமை பாராட்டப்பட்டது.

பூவு ளானுமப் பொருகடல் வண்ணனும் புவியிடந் தெழுந்தோடி, மேவி நாடிநின் னடியிணை காண்கிலா வித்தக மென்னாகும், மாவும் பூகமுங் கதலியு நெருங்குமா தோட்டநன் னகர்மன்னித், தேவி தன்னொடுந் திருந்துகே தீச்சரத் திருந்தவெம் பெருமானே.

க. பிரமனும் விஷ்ணுவும் மேலேசென்றும் பூமியைக்கிழித்தும் அன்னமும் பன்றியுமாய்த் தேடிப்பார்த்து நமது முடியையும் அடியையும் காண்கின்றிலர். மாமரங்களும் கமுகுகளும் வாழைகளும் (பிறவும்) நெருங்கிய மகாதுவட்டாபுரத்திலே நல்ல நகரத்திலே கௌரியம்மையாரோடு கூடி சராசரவஸ்துவாகி இருக்கின்ற எமது கடவுளே அவர்களுடைய ஞானம் எவ்வாறாகும். இது பிரம விஷ்ணு சிறுமையும் திருக்கேதீச்சரத்தலத்தின் பெருமையும் கூறப்பட்டது.

புத்த ராய்ச்சில புனைதுகி லுடையவர் புறனுரைச் சமணா தர், எத்த ராகிநின் றுண்பவ ரியம்பிய வேழைமை கேளேன்மி ன், மத்த யானையை மறுகிட வுரிசெய்து போர்த்தவர் மாதோ ட்டத், தத்தர் மன்னுபா லாவியின் கரையிற்கே தீச்சுர மடை மின்னே.

க0. பக்தர்களே துவர்நிறமுடைய கிழித்துத்தைத்த வஸ்திரத்தை அணிபவர்களும் பலரைப் புறங்கூறி வஞ்சித்துநின்று புசிப்பவருமாகிய சமணர்கள், போதிக்கின்ற அறியாமையாகிய மூடபுத்தியைக் கேளாதொ ழியுங்கள், கஜேந்திரனென்னும் யானையை அஞ்சும்படி யுரித்துப்போர்த் தவர், மாதோட்டத்திலுள்ள பரமபிதா, அவர் வீற்றிருக்கின்ற பாலாவிக் கரையிலுள்ள திருக்கேதீச்சுரத்தை அடையுங்கள்.

மாடெ லாமண முரசெனக் கடலின தொலிகவர் மாதோ ட்டத், தாட லேறுடை யண்ணல்கே தீச்சுரத் தடிகளை யணி காழி, நாடு ளார்க்கிறை ஞானசம் பந்தன்சொன் னவின்றமூ பாமாலை, பாட லாயின பாடுமின் பத்தர்காள் பரகதி பெற லாமே.

கக. பக்கங்களிலெல்லாம் மணமுரசைப்போலச் சமுத்திரவோ சையானது பிறவோசைகளையடக்கும் மாதோட்டநகரத்துள் இடபா ரூடராகிய சிவபெருமான் வீற்றிருக்கும் திருக்கேதீச்சுரம் அப்பெருமா னை அழகிய சீர்காழி நாட்டுள்ளார்க்குத் தலைவன் திருஞானசம்பந்த மூர்த்தி அவர்பாடிய இப்பதிகத்தையே பாடுங்கள் பக்தர்காள்! ஈசுவர சாந்நித்தியமடையலாம்.

சுவாமிபெயர்—கேதீஸ்வரர். தேவியார்—கௌரிநாயகியம்மை.

திருச்சிற்றம்பலம்.

---

## ஸ்ரீ சுந்தரமூர்த்திஸ்வாமிகள் தேவாரம்.

பண்—நஷ்டபாஷை

நத்தார்[1]படை ஞானன்பசு வேறிந்னை கவுள்வாய்
மத்தம்மத யானையுரி போர்த்த[2]மண வாளன்
பத்தாகிய தொண்டர்தொழு பாலாவியின் கரைமேற்
செத்தாரெலும் பணிவான்றிருக் கேதீச்சுரத் தானே.

1. புடையென்றும், 2-மழுவாளனென்றும் பாடமுண்டு.

க. கொல்லாமையையும் பொறுமையையும் சத்தியம் பேசுதலையும் பழிக்கஞ்சுதலையும் அன்பினையும் மனவொடுக்கத்தினையும் தருமத்தினையும் சிவபூசையையும் தேகத்தினை வெறுத்த தவத்தினையும் குருவினாற் சொல்லப்படும் சிவஞ்ஞானத்தையுமுடைய அடியவர்களால் வணங்கப்பெற்றுப் பாலாவியின் கரையிலேயுள்ள திருக்கேதீச்சுரத்தையுடையவர், சங்குமுதலிய பஞ்சாயுதங்களைத் தரித்த விஷ்ணுவென்னுமிடபத்திலேறினவர், மதத்தால் நனைகின்ற கதுப்புப்பொருந்திய வாயையுடைய யானைத்தோலை யுரித்துப் போர்த்த நித்தியகல்யாணர், இறந்த விஷ்ணுமுதலியோர்களுடைய என்புமாலைகளை அணிபவருமாவர்.

சுடுவார்பொடி நீறுந்நல துண்டப்பிறைக் கீறுங்
கடமார்களி யானையுரி யணிந்தகறைக் கண்டன்
பட்டேரிடை மடவாளொடு பாலாவியின் கரைமேற்
றிடமாயுறை கின்றான்றிருக் கேதீச்சுரத் தானே.

உ. சுடலையிற் சுடப்பெற்ற நீற்றையும் ஞானசந்திரனையும் கிழித்தயானைத்தோலையுமணியப்பட்டவர், நீலகண்டர், கீழ்நிலை நீராயுள்ளபாலாவியின் கரை மேற்கில் சேடனது படத்தினுல் மறைப்புற்று வாடையாற்றகர்த்துத்தாபித்த மகாமேருசிகர மத்தியிலுள்ள திருக்கேதீச்சுரத்திலே கௌரியம்மையாரோடும்கூடிக் கேதீச்சுவரர் நிச்சயமாயிருக்கின்றார்.

அங்கம்மொழி யன்னாரவ ரமரர்தொழு தேத்த
வங்கம்மலி கின்றகடன் மாதோட்டநன் னகரிற்
பங்கஞ்செய்த பிறைசூடினன் பாலாவியின் கரைமேற்
செங்கண்ணர வசைத்தான்றிருக் கேதீச்சுரத் தானே.

ங. அரூபிகளாகிய தேவஅன்னையர்களும் தேவர்களும் தொழுது துதிக்க மரக்கலம் மிகுந்துள்ள கடலாற்சூழப்பட்ட மாதோட்டநகரத்திலேயுள்ள பாலாவித் தீர்த்தக்கரையிலே, பாதிப்பிறையையும், சிவந்த கண்களையுடைய சர்ப்பக்கச்சையையுமணிந்த சாம்பமூர்த்தியாகிய கடவுள் வேண்டுவார் வேண்டுவதையீயுந்தலமாய்க் கொண்டெழுந்தருளியிருக்கின்றார்.

கரியகறைக் கண்டன்னல கண்மேலொரு கண்ணான்
வரியசிறை வண்டியாழ்செயு மாதோட்டநன் னகரிற்
பரியதிரை யெறியாவரு பாலாவியின் கரைமேற்
றெரியும்மறை வல்லான்றிருக் கேதீச்சரத் தானே.

௪. நீலகண்டரும், நெற்றிக்கண்ணரும், அறியத்தகும்வேதங்களில் வல்லரும், அழகிய இறகையுடைய தேன்வண்டுகள்பாடுகின்ற மாதோட்டத்திலே, பெரியதிரைபெருகும் பாலாவியின் கரைமேலே இடைநாடித்தலமாயுமுள்ளவர்.

அங்கத்துறு நோய்களடி யார்மேலொழித் தருளி
வங்கம்மலி கின்றகடன் மாதோட்டநன் னகரிற்
பங்கஞ்செய்த மடவாளொடு பாலாவியின் கரைமேற்
றெங்கம்பொழில் சூழ்ந்ததிருக் கேதீச்சுரத் தானே.

௫. தோணிகள் நிறைந்து விளங்குகடலாற் சூழ்ந்த மாதோட்ட நகரத்திலேயுள்ள அடியவர்களுடைய சரீரத்தின் கண்ணேயுள்ள நோய்களை நீக்கியருளுகின்றவர், பாகத்தைக்கொண்ட கௌரியம்மையாரோடு மேலாகிய திருக்கேதீச்சுரத்திலே பாலாவியின் கரைமேலேயுள்ள கடவுள்.

வெய்யவினை யாயவ்வடி யார்மேலொழித் தருளி
வையமலி கின்றகடன் மாதோட்டநன் னகரிற்
பைம்பொரிகை மடவாளொடு பாலாவியின் கரைமேற்
செய்யச்சடை முடியான்றிருக் கேதீச்சுரத் தானே.

௬. பூமியை விருத்திசெய்கின்ற கடலையுடைய மாதோட்டமாகிய நல்லநகரத்திலே திருக்கேதீச்சுரமென்னும் க்ஷேத்திரத்திலே மேலாகிய பாலாவியின்கரைமேலே பசிய அழகிய இடைநாடியாகிய கௌரியம்மையாரோடு சிவந்த சடைமுடியினையுடைய சிவன் அடியார்மீது வருந் தீவினைகளை நீக்கியருளுகின்றார்.

ஊனத்துறு நோய்கள்ளடி யார்மேலொழித் தருளி
வானத்துறு மலியுங்கடன் மாதோட்டநன் னகரிற்
பானத்துறு மொழியாளொடு பாலாவியின் கரைமே
லேனத்தெயி றணிந்தான்றிருக் கேதீச்சுரத் தானே.

௭. வெண்சங்குகள் மிகுந்த கடலையுடைய மாதோட்டமாகிய நல்லவூரில் திருக்கேதீச்சுரமென்னும் ஸ்தலத்தில் மேலாகிய பாலாவியில் இனிய குணமாகிய சொற்களையுடைய கௌரியம்மையாரோடு பன்றியினது எயிற்றையணிந்த சிவன் அடியார்கள்மீது வருகின்றகெடுதியைக் கொடுக்கும் ரோகங்களை நீக்கியருளுகின்றார்.

அட்டன்னழ காகவரை தன்மேலர வார்த்து
மட்டுண்டுவண் டாலும்பொழின் மாதோட்டநன் னகரிற்

பட்டவரி நுதலாளொடு பாலாவியின் கரைமேற்
சிட்டன்னமை யாள்வான்றிருக் கேதீச்சரத் தானே.

அ. தேனையுண்டு வண்டுகள் சுழலப்படும் சோலைகளையுடைய நல்லவூராகிய மாதோட்டத்திலே, திருக்கேதீச்சரமென்னும் பூமியிலே வரிகளாலழகிய நெற்றியினையுடைய நீலநிறத்திருமாதுடன் பாலாவியின் கரைமேலேயுள்ள ஞானி, அட்டமூர்த்தியாயுள்ளவர், மேலானவர், திருவரையிலே அழகுபொருந்தச் சுத்தமாயையாகிய சர்ப்பக்கச்சையை யணிந்து நம்மையுமாளுகின்றவர்.

மூவரென விருவரென முக்கண்ணுடை மூர்த்தி
மாவின்கனி தூங்கும்பொழின் மாதோட்டநன் னகரிற்
பாவம்வினை யறுப்பார்பயில் பாலாவியின் கரைமேற்
றேவன்னெனை யாள்வான்றிருக் கேதீச்சரத் தானே.

௯. பிரம விஷ்ணு உருத்திரரெனவும், சத்தி சிவமெனவும் பேசப்படுகின்ற மூன்றுகண்களையுடையதலைவராகியகடவுள், என்னையுமடிமையாகவுடையவர், மாங்கனிகள் தூங்குகின்ற சோலைகளையுடைய விராட்புருடனின் உதடாகிய மாதோட்டநகரிலே இருவினைகளையும் கெடுக்கின்ற அடியார்கள்வசிக்கும் நல்ல பாலாவியின்கரைமேலே திருக்கேதீச்சரமென்னும் தேவஸ்தானத்தைக்கொண்டுள்ளவர்.

கறையார்கடல் சூழ்ந்தகழி மாதோட்டநன் னகருட்
சிறையார்பொழில் வண்டியாழ்செயுங் கேதீச்சரத் தானை
மறையார்புக ழூரன்னடித் தொண்டன்னுரை செய்த
குறையாத்தமிழ் பத்துஞ்சொலக் கூடாகொடு வினையே.

௧0. கரிய கடலாற் சூழ்ந்த கழிக்கரையினையுடைய மாதோட்டத்திலே வண்டுகள் கீதங்களைப்பாடுகின்ற சோலைகளையுடைய நல்லநகரத்தினுள்ளே திருக்கேதீச்சரமூர்த்தியாயுள்ள தலைவனை பிராமணர்களாற் புகழப்பட்ட திருமுனைப்பாடிநாட்டுச் சுந்தரமூர்த்திஸ்வாமிகள் பாடியகுறைவில்லாத தமிழ்வேதமாகிய பத்துப்பாக்களையுமோதக் கொடியவினை அவர்களைத்தொடராது,

சிவமயம்.

# திருக்கேதீச்சுவரக்ஷேத்திர வைபவம்.

---

### விநாயகவணக்கம்.

பிரணவப் பொருளாய்ப் பேரொளி யுருவாய்த்
தந்தி வதனமுந் தொந்தி யுதரமும்
நான்கு புயமு மைந்து கரமுங்
கொண்டருள் விநாயகக் கடவுட னடியிணை
விக்கின நிவாரண மாகப்
பக்தியொ டேத்தித் தொழுவோம் யாமே.

---

## முதலாவது அத்தியாயம்.

### புராணவரலாறு.

முன்னொருகாலத்திலே, பிரமதேவராற் செலுத்தப்பட்ட தருப்பைச் சக்கிரத்தினாலே புண்ணியபூமியென்று குறிக்கப்பட்ட நைமிசாரணியவனத்திலே வாசஞ்செய்த மோக்ஷவிச்சையுடைய பிரமஞானிகளும், இந்திரியநிக்கிரகமும், அடங்கிய கோபமும், ஜீவகாருணியமும், அஷ்டாங்க யோகாநுபவமும், பஞ்சயஜ்ஞப் பெரும்பற்றும் உள்ள மஹாத்மாக்களுமாகிய சௌனகாதிமுனிவர்கள் கோமதியாற்றங்கரையிலே, தீர்க்கசத்திரமென்னும் யாகத்தைச் செய்திருந்தனர்.

அச்சமயத்திலே சகலபுராணங்களையு முணர்ந்தவரும், குருவாகிய வியாசபகவானுடைய அருளைப் பூரணமாகப்பெற்ற முற்றத்துறந்த மஹாத்மாவும் ஆகிய சூதமஹாமுனிவர், மரவுரி, சடை, உருத்திராக்ஷமாலை, திரிபுண்டரமுதலியன பிரகாசி

ஈருங் கோலமுடையராய் அவ்விடத்தையடைந்தனர். அங்ஙனமடைந்த முனிவர்பெருமானைக் கண்ட நைமிசாரணியவிருடிகள் விரைந்தெதிர்கொண்டு சென்று அவரை வணங்கி யுபசரித்து, அழைத்து வந்து தங்களுக்கு மத்தியில் உயர்ந்த பரிசுத்தமான வாசனத்திலிருத்தி அர்க்கிய பாத்தியா சமனீயாதிகளால் முறைப்படி பூசித்துத் தாங்கள் நெடுங்காலமாகக் கேட்கவேண்டுமெனப் பேராவல்கொண்டிருந்த புராணசரிதங்களை உலகிலுள்ளார் பிறருமறிந்தீடேறும்வண்ணம் அத்தவக்கிழவராகிய முனிவர்பெருமானிடங் கேட்பாராயினர்.

ஓ! சகலதருமங்களையும் போதியாநின்ற மஹாபாக்கியவானான முனிசிரேஷ்டரே! தேவரீரிடத்திலே நாங்கள் சகலபுராணங்களையுங் கேட்டுளோமாயினும் இன்னும் ஒன்று கேட்க விரும்புகின்றோம். அஃதாவது தேவரீரால் வடகயிலை தென்கயிலையென்னு மிருகைலாச ஸ்தானங்கள் பூமியிலே யாவர்க்கும் மோக்ஷங்கொடுக்கு மியல்பினவாயிருக்கின்றனவென்ன முன்பு கூறப்பட்ட அவற்றின் விரிவேயாம். ஆகையால், நற்றவத்தீர்! அவற்றினுற்பத்தி விபவங்களை எங்களுக்குச் சவிஸ்தாரமாகத் தயைகூர்ந்து சொல்லியருளவேண்டுமென்றார்கள்.

அப்பொழுது சூதமஹாமுனிவர் ஓ முனிவர்களே! மஹான்களும் மேதாவிகளுமாகிய உங்களாற் செய்யப்பட்ட சகல லோகஜனங்களுக்கும் நன்மைபயப்பதான இந்த உத்தமப் பிரசினமானது மிகவுநன்றாயிருக்கின்றது! நன்றாயிருக்கின்றது!! ஓ! சௌனகாதிமுனிவர்களே! உங்களாற் கேட்கப்பட்ட பரமரகசியமான இச்சரித்திரம் ஆதியிற் ஸ்ரீ பரமேஸ்வரனாற்றிருநந்தியந்தேவருக்கும் அவராற் சநற்குமாரமுனிவருக்கும் அச்சநற்குமாரமுனிவரால் முனிவர்பெருமானாகிய வியாசபகவானுக்கும் குருமூர்த்தியாகிய அவரால் எனக்கும் உபதேசிக்கப்பட்டது. அத்தகைய சகல புராணேதிகாசங்களின் சாரமாயுள்ள இதனை மெய்யன்புடனே கேட்கு முங்கட்குச் சவிஸ்தாரமாகச் சொல்லுகின்றேன். ஆதரவுடன் புலன்வேறின்றிக் கேளுங்களென்னச் சொல்லத்தொடங்கினார்.

ஓ! சௌனகாதிமுனிவர்களே! பிரமபுராணம், பதுமபுராணம், விஷ்ணுபுராணம், சிவபுராணம், தேவிபுராணம், பவிஷ்யோத்தரபுராணம், நாரதபுராணம், மார்க்கண்டேயபுராணம், அக்கினிபுராணம், பிரமகைவர்த்தபுராணம், இலிங்கபுராணம், வராகபுராணம், கந்தபுராணம், வாமனபுராணம், கூர்மபுராணம், மத்சியப்புராணம், கருடபுராணம், பிரம்மாண்டபுராணம் எனப் புராணங்கள் பதினெட்டு. அவற்றுள் பிரமபுராணம், பதுமபுராணம் என்னும் இரண்டும் பிரமாவுக்குரியனவென்று அறிஞராலுரைக்கப்பட்டன. அங்ஙனமே அக்கினியைக்குறித்து அக்கினிபுராணமும், சூரியனைக்குறித்துப் பிரமகைவர்த்தபுராணமும், விஷ்ணுவைக்குறித்து நாரதபுராணம், கருடபுராணம் விஷ்ணுபுராணம் என்னும் மூன்றும், சிவபெருமானைக் குறித்துச் சிவபுராணம் பவிஷ்யோத்தரபுராணம் மத்ஸியபுராணம் இலிங்கபுராணம் கூர்மபுராணம் வாமனபுராணம் மார்க்கண்டேயபுராணம் பிரமாண்டபுராணம் கந்தபுராணம் வராகபுராணம் என்னும் பத்துப் புராணங்களும், தேவியைக்குறித்துப் பாகவதபுராணம் கூறும். இவைதவிர உபபுராணங்களும் பதினெட்டுண்டு, அவை சநற்குமாரபுராணம், தூர்வாசபுராணம், நரசிங்கபுராணம், வாமனபுராணம், சிவதருமபுராணம், பவிஷ்யபுராணம், நாரதபுராணம், கபிலபுராணம், கந்தபுராணம், பிரமாண்டபுராணம், காளிகாபுராணம், மகேசபுராணம், ஸௌமியபுராணம், பார்க்கவபுராணம், ஸௌரபுராணம், பாராசரபுராணம், மரீசிபுராணம், வருணபுராணம் என்பனவாம்.

இப்புராணங்களெல்லாம் சகலலோகங்களினது மிதத்துக்காக எங்கள் முன்னோரால் தெரியப்பட்டுள்ளன. இத்தகைய பலபுராணங்களினதும் சாராம்சங்களை ஒருங்குதிரட்டித் தக்ஷிண கைலாசமான்மியமெனப் பேர்புனைந்தளவிதனை ஆர்வத்தோடு கேட்பீர்களாகவென்று உதாரமும் விநயமும் விளங்குமியல்பினராகிய சூதமகாமுனிவர் அஞ்சலியஸ்தராய்க் கடவுளவ்வண்ணங் கூறுவாராயினர்.

வேதசாஸ்திரங்களைக் கற்றறிந்த தெளிந்த புத்தியினையும் புலித்தோலாடையினையும், தேவர் முனிவர்களாது வணக்கத்

தினையும், கவித்தன்மையினையும், பிரம்மானுசந்தானத்தினை யும், பிரம்மதேஜஸ்ஸையும், பொன்மயமும் மஞ்சளநிறமுமாய் விளங்காநின்ற ஜடாபாரத்தினையு முடைய முனிவர் திலகமாகிய ஸ்ரீ வேதவியாசமகாமுனிவரை நமஸ்கரிக்கின்றேன். என்றும்,

வசிஷ்டமுனிவருக்குப் பிரபௌத்திரரும், சக்திமுனிவருக்குப் பௌத்திரரும், பராசரமுனிவருக்குப் புத்திரரும், சுகப்பிரம்மமுனிவருக்குப் பிதாவும் தூய்மையும், தவநிலையுமுள்ள வியாசபகவானை வணங்குகின்றேன். என்றும்,

விஷ்ணுரூபியாகிய வியாசமகரிஷிக்கும் வியாசரூபங் கொண்ட விஷ்ணுவுக்கும் பிரம்மநிதியாகிய வசிஷ்டமகரிஷிக்கும் நமஸ்காரம். என்றும்,

மேலும், ஸ்ரீ விக்கினேஸ்வரர், பஞ்சமூர்த்திகள், பஞ்சசத்திகள், சுப்பிரமணியர், துர்க்காதேவி, வைரவக்கடவுள், சரஸ்வதி, நவக்கிரகங்கள், நக்ஷத்திரங்கள், இராசிகள், திக்குப்பாலகர்கள், சத்தமாதர்கள் என்னும் இவர்கள் யாவரையும் அருட் செல்வத்தை வேண்டி நமஸ்கரிக்கின்றேன். என்றும்,

நான்குமுகமில்லாத பிரம்மாவும், இருபுயங்களையுடைய இரண்டாவது விஷ்ணுவும், நெற்றிக்கண்ணில்லாத பரமேஸ்வரனும் அப்பகவான் வாதராயணரே யாகையால் மேலுமவரை நமஸ்கரிக்கிறேனென்றும் கூறி, இங்ஙனம் குருமூர்த்திகளையும், தேவர்களையும் நமஸ்கரித்துக்கொண்டு, சூதமகாமுனிவர் புராணப்பிரசங்கஞ் செய்வாராயினார்.

## இலங்கைச்சிறப்பு.

ஓ! சௌனகாதிமுனிவர்களே! அங்கம், வங்கம், கலிங்கம், காம்போசம், கௌசிகம், காஷ்மீரம், சூரம், கூர்ச்சரம், பர்ப்பரம், அருணம், குரு, காந்தாரம், ஹூணம், ஸௌவீரம், ஸௌராஷ்டிரம், மஹாராஷ்டிரம், மத்திரம், மகதம், மாஜரம், நிஷதம், சிந்து, தசார்ணம், மாளவம், சோளம், கேரளம்,

சிம்மளம், கௌடம், நேபாளம், பாஞ்சாலம், வங்காளம், மலையாளம், கோடகி, வீடம், கூடகம், மராடம், கர்நாடம், கரகாடம், பாளுடம், பாண்டியம், புளிந்தம், திரிகர்த்தம், குந்தளம், அவந்தி, விதேகம், விதர்ப்பம், மத்ஸ்யம், வத்ஸகம், சகலம், பாகசாவந்தி, யவனம், சாலுவம், வாஹ்லிகம், கேகயம், கோசலம், கொங்கணம், டங்கணம் என்னும் இந்த ஐம்பத்தாறுதேசங்களிலும் சிம்மளதேசம் சிரேட்டமானது.

கல்விவிருத்தி பொருட்பேறு ஆன்மசுகம் என்பன எத்தேசத்திலே இல்லையோ அந்தத் தேசத்திலே ஒருநாள்தானும் வசித்தல் கூடாது.

தேவகடாக்ஷமில்லாத தேசத்தையும், இடர்செய்யும் பங்காளிகளையும், கடுமுகியான மனையாளையும், ஞானமில்லாத குருவையும் நீக்கல் தகும்.

தேசாந்தரங்களைத் தீபாந்தரங்களை யடைந்துளராயினும் தீர்த்தயாத்திரை செய்பவரைப் புண்ணியசாலிகளென்று கொள்ளத்தகும்.

தபமும் புண்ணியக்ஷேத்திர யாத்திரையும் கேரளம் கொங்கணமொழிந்த தேசங்களில் மரணாந்த வாசமும் செய்பவர்களைப் புண்ணியவான்களென் றெப்பத்தகும்.

பூமியின் மத்தியிலே சகலதேசங்களுக்கு முத்தரபாகத்திலே மகாமேருவென்னு மோர் மலையுளது. அதனருகே திருக்கைலாசமென்னு மொரு சிறந்த வெள்ளிமலை பிரகாசித்திருக்கிறது. அம்மலையிலே பார்ப்பதி அம்மையாரும் பரமேஸ்வரப் பெருமானும் பிரத்தியட்சமாக எழுந்தருளி யிருக்கின்றனர். ஆதிசேதுமுதல் அக்கைலாசமலைவரையும் உள்ள தேசம் கர்மபூமி யெனப்படும். அவ்விடம் ஒன்பதினாயிரம் யோசனை தூரவிசாலமும் நூறாயிரம் யோசனை தூர நீளமுமுடையது. மேருமலைக்குத் தென்பாகத்தில் இமயமலைக்குஞ் சேதுவுக்கும் இடைத்தேசம் காமாசலம், பிரபாஸதீர்த்த மென்பவை யுட்பட பரதகண்டமெனப்படும். இப்பரதகண்டம் ஒன்பது பா

கமாக முன்னரேயே பகுக்கப்பட்டிருக்கிறது. அவற்றுள் குமாரிகண்டமு மொன்று. அக்குமாரிகண்டமோ தன்னிடத்திருந்து அற்பபுண்ணியஞ் செய்யினும் ஒருவனுக்குப் பெரும்பலன் சித்திக்கச் செய்யுந் தன்மையதன்றோ!

ஓ! இருபிறப்பாளர்களே!! சமுத்திரத்தாற் சூழப்பட்ட சேதுமத்திய ஸ்தானமாகிய அக்குமாரிகண்டத்திலேயே திரிகூடஸ்தலம் விளங்குகின்றது. அத்திரிகூடத்துக்குச் சமமான தலம் பிறிதொன்றுமில்லை யெனலாம். மற்றைய தேசங்களிலே உள்ள துன்மார்க்க சாரிகளாகிய அரசர்களோ பூமியின் வரவு பாகங்களை அவ்வத்தேச ஜனங்களிடம் ஆறிலொன்றாக வாங்கி நரகத்துக்காளாகின்றனர். இந்தத் திரிகூடமென்னும் இலங்கைத் தேசத்திலே அங்குள்ள பெருமையுள்ள அரசர்கள், அந்தத்தேசக் குடிசனங்களின் நன்மையைப் பெரிதுங் கருதுபவர்களாய்ப் பூமியின் வரவுபாகங்களைப் பத்திலொன்றாகப் பெற்றுத் தருமமுறை பிறழாது இராச்சிய பரிபாலனஞ் செய்கின்றனர்.

சில தேசங்களிலே உள்ளவர்கள் தங்க ளருமைக் கன்னியர்களைக் "கன்யாசுல்க" மென்னுஞ் சாக்கினால் வேதவிரோதமாக விலைக்கு விற்று மகாபாவத்துக் காளாகிக் கற்பகாலம் நிரயத்துன்பத்தை அடைகின்றனர் "தமது நிலத்தை ஈடுவைத்தல், கன்னிகைகளை விற்றல், பசுவைவிற்றல், அரசனைப் பகைத்தல், கொடியவார்த்தை பேசுதல் என்னு மிவ்வைந்துங் குலத்தைக் கெடுப்பன" வாகையால் மேற்கூறியவர்களைப் போல அவ்விநாட்டவர்கள் தங்கள் கன்னிகைகளை ஒருபோதும் விற்பதில்லை. ஆபரணங்கள், விளைநிலங்கள், வீடுகள், உபகரணங்கள், வேலைக்காரன், வேலைக்காரி, வண்டியெருதுகள், கறவைப் பசுக்கள், பொன் முதலிய பலவித வரிசைகளுட னலங்கரிக்கப்பட்ட மகடூஉக்களைச் சகலசற்குண வித்தியாசம்பூரணரும் [illegible]முடையருமாகிய வரர்களுக்குத், தசப்பொருத்தமும், நன்முகூர்த்தமு மமையத் தந்தையுந் தாயும் வேதாகம விதிப்படி தாராதத்தஞ் செய்வதே வழக்கமாகும்.

மேலும், அவ்விலங்கைத் தேசம் அநேக சிவக்ஷேத்திரங்கள், விஷ்ணு ஸ்தலங்கள், விநாயக சுப்பிரமணியாலயங்கள்.

புண்ணிய விருக்ஷங்கள், நதிகள், நதங்கள், வாவிகள், கூபங்கள், ஓஷதிகள், பலவகைப் பக்ஷிகள், பலவகை மிருகங்கள் உலோகங்கள் முதலியன யாவும் பொருந்தப் பெற்றிருக்கின்றது. எக்காலமும் பயன்றருவனவாயங்கே நிற்கும் மரங்கள் செடிகள் கொடிகள் முதலியனவும் பலவுள. மகிமையமியமான புஷ்பங்கள் பழவர்க்கங்கள் கிழங்குகள் முதலியனவுமிருக்கின்றன. அங்கே வசிக்கும் மனிதர்கள் யாவரும் சுகசீவனஞ் செய்வதிலே பற்றுடையவர்கள். இங்ஙனமே பலவகைப் பெருமையையும் அத்தேசம் பெற்றிருக்கின்றது.

பூமியிலே உள்ள அயோத்தி மதுரை மாயை காசி காஞ்சி அவந்தி துவாரகை துவட்டாபுரி தென்கயிலை என்னும் ஒன்பது நகரங்களும் பக்தி சிரத்தைகளை உடைய ஆன்மாக்களுக்கு மோக்ஷங்கொடுக்கும் தானங்களாம். அவற்றுள் மீள துவட்டாபுரி தென்கயிலை என்னுமிரண்டுஞ் சிறந்தவை. அவைகள் கன்மபூமியென முன்விதந்து கூறிய குமாரிகண்டத்திலே விளங்குகின்றன. ஆயிரத்தெட்டு சிவஸ்தலங்களும் நூற்றெட்டு விஷ்ணுக்ஷேத்திரங்களும் பதினெட்டுக் குகாலயங்களும் விளங்கும் பெருமைவாய்ந்த அக்குமாரிகண்டத்திலே யுள்ள மோக்ஷஸ்தானங்களாக எண்ணப்படும் அவற்றின் பெருமையை யார்தான் கூறவல்லுனர். அடியார்களுக் கருள் புரிதலில் அவை முதன்மை பெற்றனவாயிருக்கின்றன.

பெருமை பொருந்திய தக்ஷிண் கைலாச மென்னுந் திருக்கோணசலத்திலே சிவபெருமான் உமையம்மையாருடனே பிரத்தியக்ஷமாக விருத்தலினாலும்; மாதோட்டமென்னுந் திருக்கேதீஸ்வரத்திலே பரமேஸ்வரன் அடியார்க் கருள்புரியும் நோக்கமாகக் கௌரியம்பிகை நேத்திரானந்தங்கொள்ளப் பஞ்சகிருத்திய திருநடனஞ் செய்து கொண்டிருத்தலினாலும் இவ்விலங்கைத் தேசமானது ஐம்பத்தாறு தேசங்களினும் சிறந்ததாக விருக்கின்றது. இதற்கொப்பானதேசம பிறிதொன்று முன்னுண்டானதுமில்லை இனி உண்டாவதுமில்லை என முக்காலங்களையுமுணர்ந்த சூதமுனிவர் கூறிப் பின்னுங் கூறுகின்றார்.

ஓ முனிவர்களே! இந்த இரண்டு தலங்களினதும் வைப வங்களைச் சிவபெருமான் ஒருவரே சொல்லவல்லவர். ஏனைய சிற்றறிவினராகிய எம்போலிகளால்எடுத்துக் கூறுதல்கூடாது. ஆயினும், அன்பர்களே! எனக்குத் தெரிந்த சுருக்கமான விபவங்களைக் கூறுகின்றேன் கேட்பீர்களாக என்று சூதமகா முனிவர் சொல்லத்தொடங்கினர்.

இந்த அத்தியாயத்தைப் படித்தவர்கள் கேட்டவர்கள் ஆகிய யாவரும் செல்வம் ஆயுசு சுகம் என்பவற்றைப் பெற்று வாழ்வார்கள்.

தக்ஷிணகைலாச மான்மியத்தில்
புராணவரலாறும் இலங்கைச் சிறப்புங் கூறிய
க-வது அத்தியாயம் முற்றிற்று.

—0—

## இரண்டாவது அத்தியாயம்.

இலங்கையிலுள்ள தேவஸ்தானங்களும், திருக்கேதீஸ்வர உற்பத்தி விபவங்களும்.

நைமிசாரணிய வாசிகளைப் பார்த்துச் சூதமுனிவர் சொல்லுவாராயினர். ஓ! இருடிகளே! மாக்ஷிமை பொருந்திய உத்தர கைலாசத்தின் சிறப்புக்களைப் போலவே, இலங்கையின் மகிமையும் அதிலுள்ள க்ஷேத்திர தீர்த்த விபவங்களுமாம்.

இலங்கையின் கீழ்ப்பிரதேசத்திலுள்ள தக்ஷிண கைலாசம் இன்னும் இப் பூவுலகத்திலே யாருமறிதற்கு மிகவரிதாகவிருக்கின்றது. இதனை இதற்குமுன் யாவனொருவருக்குஞ் சொன்னவனல்லன் ஆதலால்,

முனிபுங்கவர்களாகிய பிராமணச் சிரேட்டர்களே, மனதை யொருவழிப்படுத்திப் பத்திச் சிரத்தையுடன் கேட்பீர்களாக. பிண்டம் அண்டம் பிரமாண்டமென்பன எப்பொழு

துஞ் சலித்துக்கொண்டிராமல் திரப்படுத்தச் சிவபெருமான் திருவுளங்கொண்டு, "அனேகந் தலைகள் அனேகங் கண்கள் அனேகம் புயங்கள் அனேகங் கால்கள் பொருந்தி" விசுவரூபங்கொண்டருளினர். அச்சமயத்திலே எப்பொழுதுஞ் சலித்தற்குணமுடைய நாடிகளை, முறையானே சிம்மள தேசத்திலுள்ள திரிகூட க்ஷேத்திரத்தில் "இடைகலை" என்னு நாடியையும், ஹிமவத்பருவதத்திலே "பிங்கலை" என்னு நாடியையும், தில்லைவனமாகிய சிதம்பர க்ஷேத்திரத்திலே நடுநாடியாகிய "சுழுமுனை" என்னு நாடியையும் நிலை நிறுத்துவாராயினர். இதனுலே இம்மூன்று தலங்களும் உலகத்திலுள்ள எவற்றினுக்கு முத்தமோத்தமமானவையாகும்.

கங்காநதியின் மத்தியத்தில் விளங்காநின்ற பிரயாகை என்னும் பிரம்ம க்ஷேத்திரமும், சமுத்திரமத்தியில் விளங்கா நின்ற துவாரகை என்னும் விஷ்ணு க்ஷேத்திரமும், தென்சமுத்திரமத்தியிலுள்ள தக்ஷிண கைலாசமென்னும் சிவக்ஷேத்திரமும் பூமியிலுண்டானதும் தாவர ஜங்கமங்களுக்கு மோக்ஷவித்துக்களாக, ஆதியிலே பரமசிவனல் படைக்கப்பட்டு விளங்குகின்றன. இம்மூன்று தானங்களிலும் பிரமா விஷ்ணு சிவன் மூவரும் பிரத்தியக்ஷமாக விருந்து அருள் புரிகின்றனரென்று வேதத்திலேயே கூறப்பட்டிருக்கிறது. மேலும்,

இத் தக்ஷிண கைலாசம் பொருந்தியுள்ள வீழ்தேசமானது, பண்டைக்காலத்திலே புலஸ்தியமகா முனிவரின் புதல்வர் பெருந்தவஞ்செய்து சிவபெருமானிடம் பெற்றுக்கொண்ட விசிட்டமுடையதாயுமிருக்கின்றது. அதிலே பலவகையான க்ஷேத்திர தீர்த்தங்களிருக்கின்றன. அவற்றின் மகிமை மூவுலகத்தவராலு மின்னுமறியப்படாமலிருக்கிறது. முக்கியமான அம்சங்களின் அநுக்கிரமணிகை, முதலாவது:—திரிகூட சிகரோற்பத்தி விபவங்கள். இரண்டாவது:—திருக்கேதீஸ்வர க்ஷேத்திர முண்டானதும் துவஷ்டா பூசித்ததும், அகஸ்தியர் தவஞ்செய்ததும் பிறவும். மூன்றாவது:—கந்தமாதன மலையினுற்பத்தியும் பிறவும். நான்காவது:—பெருமை பொருந்

திய உத்தரகயிலையின்தோற்றமும் பிறவும். ஐந்தாவது:—தக்ஷிணகைலாசத்தின்தோற்றமும் அதன் விபவங்களும். ஆறாவது:—திருக்காளத்தி மலையினுற்பத்தி முதலியன. ஏழாவது:—திருச்சிராப்பள்ளியினுற்பத்தியும், பிறவும். எட்டாவது:—மாவலிகங்கை, மாணிக்ககங்கை, களனிகங்கைகளினுற்பத்தியும், பிறவும். ஒன்பதாவது:—சிவனொளிபாதமலையினுற்பத்தியும், பிறவும். பத்தாவது:—அம்சுகாமாத்திரி (கதிர்காமம்)யின் விபவங்கள். பதினொராவது:—கரசை (கங்குவேலி) என்னும் க்ஷேத்திர தீர்த்தவிபவங்கள். பன்னிரண்டாவது:— அமுதகளி. ௧௩:—நவகங்கை. ௧௪:—விநாயகமலை. ௧௫:—சப்பிரகாமம். ௧௬:-அநுராசபுரம். ௧௭:-முள்ளாலங்காடு. ௧௮:-குதிரைமலை. ௧௯:-முனீஸ்வரம் மாயவனாறு இவற்றின் மான்மியங்களும் பிறவும் ௨௰:-கலாநதம் (கல்லாறு) ௨௧:-பாலாவியாறு அருவியாறுகளின் மகிமைகள். ௨௨:-கீரிமலை விசேஷங்கள் ௨௩:-கிருச்சிரம் முதலிய விரதங்களின் முறைமைகள்; இவற்றின் பயன்கள் ஆகிய இன்னோரன்ன விடயங்களைக் கூறுதற்கு ஸாக்ஷாத் பரமசிவனே யன்றி ஆயிரம் நாவுடைய வாதிசேடனும் வல்லவனல்லன்.

விநாயகர், சுப்பிரமணியர், ஐயனார், இராமர், அநுமார், மகாகாளி, அசுரவைரியாகிய துர்க்கை, சிவன், அம்பிகை, விஷ்ணு, இலக்குமி, பிரமன், வைரவர், வீரபத்திரர் முதலான தேவர்கள் சதாகாலமும் பிரசன்னராக விருந்துகொண்டு அருள் புரிகின்றனர். அங்கே ஜபதபங்கள் மிகச் சீக்கிரத்திலே சித்தியாகிப் பயன்கொடுக்கின்றன. இதினும் மிகுந்தவையானது பிறிதில்லை என்று கூறக்கேட்ட முனிவர்கள் அத்தனைய தலத்திலுள்ள க்ஷேத்திரங்கள் தீர்த்தங்களின் விசேஷங்களை முழுமையும் விரிவாகச் சொல்லக்கேட்க விரும்புகின்றோம் என்றனர். அதுகேட்ட சூதபுராணிகர், முனிவர்களே! மிகப்பழமையானவோர் சரித்திரத்தைக் கேட்பீர்களாகவென்று கூறத் தொடங்குவாராயினர்.

முன்னொரு காலத்திலே வாயுதேவனும் ஆதிசேடனும் வீரக்குவாதத்தினால் தனித்தனி "நானேவீரன்" "நானேவீரன்"

என்றொருவர்க்கொருவர் ஆக்கிரகத்தினாற் கோபங்கொண்டு பெரும்போர்புரிவாராயினர். அக்கணத்திலாதிசேடன் தன்னுடைய ஆயிரம் பணாமுடிகளினாலே மகாமேருவினுயிரஞ் சிகரங்களையுஞ் சீக்கிரமாக மறைத்தனன். அதுகண்டு வாயுதேவனதனைச் சகிக்கலாற்றாது பிரசண்டமாருதமாகக் கோபங்கொண்டு மிகுந்தவலிமையோடும் அச்சேடனுடைய சிகரங்களைச்சிதறும்படியடித்துவீழ்த்தியதோடமையாது, அந்தமகாமேருவின் அழகிய கொடுமுடிகள் மூன்றினைப் பறித்துத் தென்றிசைநோக்கிக் கொண்டுசென்று திரிகூடம் திருக்கேதீஸ்வரம் கந்தமாதனம் என்னு நாமத்துடன் தென்சமுத்திர மத்தியிலே பிரதிட்டை செய்தனன்.

வலிமையிற் சிறந்த வாயுதேவன் முதற்கண்தாபித்த உலக நன்மையின் பொருட்டான திரிகூடத்தை, யாவராயினும் நினைத்த மாத்திரையிலே சகலபாவங்களினீக்கம்பெற்று உய்வடைகின்றனர். ஓ! இருபிறப்பாளர்களே! பின்பு அந்த வாயுதேவன் இதனையடுத்து இரண்டாவதாகத் தாபித்துள்ள திருக்கேதீஸ்வர சிகரத்தில் விளங்காநின்ற அற்புத விபவங்களைச் சற்றுக் கவனமாகக் கேட்பீர்களாக.

அங்கே ஆன்மாக்களுக்குச் சுபத்தைச் செய்பவரும் மகாதேவரும், சுயம்புவுமாகிய சிவபெருமான் நித்திய சான்னித்தியராகவெழுந்தருளி யிருக்கின்றனர்.

ஓ முனிபுங்கவர்களே! அத்திருக்கேதீஸ்வர தேவஸ்தானம் மாதோட்ட நகரில், பாலாவியாற்றின் மேல்கரையில் சகல தேசங்களிலுமுள்ள ஆன்மாக்களின் நன்மைக்காகப்பிரசித்தமாயிருக்கின்றது. அவ்விடத்திலுள்ள பாலாவித் தீர்த்தத்திலே முதல்வருணத்தவனான பிராமணன் "சங்கற்பம் ஸ்நானம் மார்ஜனம் அகமருஷணம் தருப்பணம்" என்னுமிவைகளுடனும் ஸ்நானஞ் செய்து, தசதானம் "பசு பூமி எள் பொன் நெய் வஸ்திரம் தானியம் சக்கரை வெள்ளி உப்பு" என்னும் பத்துத் தானங்களையும் செய்துகொண்டு, திருக்கேதீஸ்வர மகாலிங்கத்தை அபிஷேகம் அர்ச்சனை நிவேதனை ஸ்தோத்தி

ரம் நமஸ்காரங்களைச் செய்வானாயின் நிச்சயமாகச் சாயுஜ்ய மோக்ஷத்தையடைவான்.

யாவராயினும், அவரவர் சக்திக்குத் தகுந்த பிரகாரம் ஸ்நான தானங்களைச் செய்து, ஸ்ரீ. பஞ்சாக்ஷர ஜபத்தைச் செய்வாராயின், இம் மானுடயாக்கையிற் பெற்ற சகலபாவங்களினின்று நீங்கிச் சிவலோகத்தை யடைந்து சாலோகபதம் பெறுவர். மேலும்,

எவ்வருணத்தினனாயினும் எக்குலத்தினனாயினும் பாலாவித்தீர்த்தத்திலே மூழ்கித் திருக்கேதீஸ்வர தரிசனஞ் செய்வானேல் போகம் மோக்ஷம் இரண்டையும் முறையே பெறுவான். (அதாவது இவ்வுலகத்திலே வேண்டிய இன்பங்களை அனுபவித்து, மறுமையிலே நித்தியாநந்தமாகிய மோக்ஷத்தை யடைவான். என்பதாம்) பிரமகத்தி முதலிய பெரும்பாவங்களிங்கும். பிதிர்க்கடன் செய்வானாயின் "காசிக்குச் சமீபத்துள்ள கயாவிலே போய்" கயாசிராத்தஞ்செய்த பலனைப் பெறுவான். இவ்விஷயங்களிலே விசாரணையும் சந்தேகமும் சிறிதும் வேண்டியதில்லை,

பிரமா விஷ்ணு உருத்திரர் முப்பத்துமுக்கோடி தேவர் கந்திருவர் அரக்கர் வித்தியாதரர் நாகர் சாத்தியர் கின்னரர் கருடர் ஆதித்தியர் வசுக்கள் தத்துவஞானிகளான விருஷிகள் யாவரு மிந்தத் திருக்கேதீஸ்வர க்ஷேத்திரத்திலே மிகுந்தவிருப்பத்தோடு சதாகாலமும் வாசஞ்செய்கின்றனர், அதனுடைய வைபவத்தைச் சொல்லுதற்கு நானும் வேறுயாரும் வல்லுனரல்லர்.

பசு பக்ஷி மநுஷ்யர் மிருகம் முதலிய யாவும் இந்தத் திருக்கேதீஸ்வர க்ஷேத்திரத்திலே மரணமடையுங் காலத்தில் அச்சிவலிங்கப்பெருமானுடைய திக்குநோக்கி வலக்காது மேலாகப் பொருந்தும்படி கிடக்கின்றன. அப்போது தர்மாத்மாவாகிய பரமேஸ்வரன் அவற்றினுடைய வலக்காதிலே தாரகப் பிரமோபதேசஞ் செய்து அவற்றையப்போதே ஸாயுஜ்யமுத்தியுறச் செய்கின்றனர். இதனாலே இத்தலத்துக்கிணையான

புண்ணிய க்ஷேத்திரம் முன்னுண்டானதும் இனியுண்டாவது மில்லை.

மாதோட்டத்திலே பிறந்த எந்தப்பிராணிக்கும் எச்சாதி மனுஷனுக்கும் அத்திருக்கேதீஸ்வரக் கடவுளருளால் மோக்ஷ சாம்ராஜ்யம் சித்திக்கிறது. ஆகவே பிற செல்வங்கள் வேண் டற்பாலனவன்றெனபதாம். மேலும்,

இந்தத் திருக்கேதீஸ்வர க்ஷேத்திரத்திலே புண்ணியஞ் செய்தவனுயினும் பாவஞ் செய்தவனுயினும் மரணம் வரையும் பாலாவியில் முழுகுதலும், ஐம்புலனடக்குதலும், திருக்கே தீஸ்வர மகாலிங்க தரிசனமும், யாசகஞ்செய்து சீவித்தலுமு டையனுயின் அவன் தனது கோடிக்கணக்கான வம்சபிதிர்க்க ளுடன் சிவசாயுஜ்யமடைவான். மேலும்,

எந்த மனுஷன் இந்த திருக்கேதீஸ்வர க்ஷேத்திரத்திலே ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஜபம்பண்ணி பின்பு புரஸ்சரணை (உருப் போடுதல்) பண்ணுவானே அவன் நிச்சயமாகச் சித்தியை அ டைவான். இதிற் சிறிதும் சந்தேகமில்லை என; முனிவர்கள் சூத புராணிகரைப் பார்த்துப் பின்னும் வினவுகின்றனர்.

இருஷி சிரேஷ்டராகிய ஐயா! தொடக்கத்திலே திருக் கேதீஸ்வரமென்றும் இடையிலேதனைத் துவஷ்டாபுரமென்றுங் கூறினீர்களே, அதன் வரலாற்றையுந் தயவுசெய்து சொல்லிய ருளுகவென்றனர். அதுகேட்ட சூதமுனிவர் சொல்வாராயினர்.

முன்னொருகாலத்திலே தேவலோகத்தினின்றுந் தேவகம் மாளனுகிய துவட்டாவென்பவன் திருக்கேதீஸ்வர க்ஷேத்திரத் திலே வந்து பாலாவித்தீர்த்தத்திலே விதிப்படி ஸ்நானஞ் செய் தும் திருக்கேதீஸ்வர மகாலிங்கத்தை நன்றாகப் பூசித்தலு மாகிய மிக்மேலான தவத்தைச் செய்துகொண்டிருந்தான்.

அதன்பின்பு சிவபெருமான் அத்தேவகம்மியனுடைய தவத் துக்கிரங்கி மிகுந்த சந்தோஷமுடையாராய் உமாதேவியாரு டன் இடபாரூடராய்க் காக்ஷி கொடுத்தருளினர். அழகிய அவ்

வுமாமகேசுவர வடிவத்தைத், துவட்டா அன்புடன் ஸ்தோத்திரஞ் செய்கின்றனன்.

(சுலோகம்) "நமஸ்தேஸாம்ப ருத்திராயநமஸ்தேபரமாத்மகே,
சேதுமத்ய நிவாஸாய கேதீஸ்வர நமோநமஹ. 1
நமஸ்தே கில நாதாய நமஸ்தே பய நாசக,
சேதுமத்ய நிவாஸாய கேதீஸ்வர நமோ நமஹ. 2
ஆதிமந்தியாந்த சூன்யாய ஆதார நிலயாய ச,
சேதுமத்ய நிவாஸாய கேதீஸ்வர நமோ நமஹ. 3
பிரம்ஹ விஷ்ணுஸ்வரூபாய ஸிருஷ்டிஸம்ரக்ஷஹேதவே,
சேதுமத்ய நிவாஸாய கேதீஸ்வர நமோ நமஹ. 4
உமார்த்ததிவ்ய தேஹாய காருண்ய வருணாலய,
சேதுமத்ய நிவாஸாய கேதீஸ்வர நமோ நமஹ. 5
நமஸ்ஸௌந்தர ரூபாய ஸௌந்தரீ பிராணநாயக,
சேதுமத்ய நிவாஸாய கேதீஸ்வர நமோ நமஹ. 6.
நமஸ்தே ஜகதாதார நமஸ் ஸர ஸிஜாங்கிறுமேண,
சேதுமத்ய நிவாஸாய கேதீஸ்வர நமோ நமஹ. 7
புத்திரந்தேஹி கிருபாந்தேஹி தேஹிஸத் பக்திமேவச,
சேதுமத்ய நிவாஸாய கேதீஸ்வர நமோ நமஹ." 8

## இவற்றின்பொருள்.

உமாதேவிபாகரே! உருத்திரரே! பரமான்மாவே! முழுமுதற்கடவுளே! மரணபயத்தை நீக்குபவரே! முதலிடைகடையற்றவரே! ஆதாராதேயமானவரே! பிரமவிஷ்ணு ஸ்வரூபரே! உற்பத்திநாசங்களுக்குக் காரணரே! அர்த்தநாரீசுவரரே! கருணைக்கடலே! ஸௌந்தரரூபரே! வடிவழகிமணாளரே! உலகத்துக்காதாரமானவரே! அன்பரகத்தடாகத்துப் பத்தியெனும் பதுமத்துப் பானுவே! மஹாஸேது மத்தியஸ்தானமாகியுள்ளவரே! ஸ்ரீ கேதீஸ்வரக்கடவுளே! தேவரீடத்திலே நிலைபெறுண பத்தியையும் பேரருளையும் ஸத்புத்திரனையும் கொடுத்தருளும்படி நமஸ்காரம்! நமஸ்காரம்!!

இந்தப்பிரகாரம் துதிசெய்த துவட்டாவைப் பார்த்துக் கிருபாநோக்கத்தோடும் சிவபெருமான் ஆஞ்ஞை பண்ணுகின்

ளூர். ஏ "துவட்டா! இந்தத் திருக்கேதீஸ்வர க்ஷேத்திரமானது உலகத்திலுள்ள நமது தலங்களெல்லாவற்றிலு முத்தமோத்தமமானது. நீயுமிவ்விடத்திலே வாசஞ் செய்குதி. உனக்கும் எம்மிடத்திலே என்றுமிடையறாத பத்தியுண்டாகும். இந்த க்ஷேத்திரமும் மகாதுவஷ்டாபுர (மாதோட்ட) மென வழங்கும். உனக்குவிச்சுவகன்மாவென்னும் புத்திரனும் பிறப்பான்". என முன்விரும்பிய வரங்களைக்கொடுத்தருளிக் கௌரியம்மையாருடன் திருக்கேதீஸ்வரப்பெருமான் அவ்விலிங்கத்திற் கரந்தருளினூர். ஓ பிராம்மண விருஷீஸ்வரர்களே! இதனுலேயும் இந்த சிவக்ஷேத்திரத்துக் கிணையான பிறிதொன்று முன்னுண்டானது மினியுண்டாவதுமில்லை.

பின்பு மூன்ருவதாகிய கந்தமாதனபருவதத்தைத் தரிசித்தலும், ஸேதுஸ்நானஞ் செய்தலும், அகஸ்தீசர் ஹநுமேசர் பர்வதவர்த்தனீ ராமநாதர் என்பவர்களைத் தரிசித்தலுமாகிய இவை சகல இஷ்ட காமியங்களைப் பெறச்செய்து ஸாயுஜ்யப் பிராப்தியுமுண்டாக்குவன. இதிலும் சிறிதும் சந்தேகமில்லை.

திரிகூடம் திருக்கேதீஸ்வரம் ஸ்ரீகந்தமாதனம் இம்மூன்று சிகரங்களையும் நித்தமுந் தியானிக்க மகாபாதகங்களறும்.

இந்த இரண்டாமத்தியாயத்தைப் படித்தல், கேட்டல்கள் செயின்; விரும்பியபலன் கைகூடும், சகலரோகங்களும் தணிவுறும், எல்லாவிதிம்பைகளுமகலும், மலடியும் மைந்தனைப் பெறுவாள் எப்பொழுதும் மங்களமுண்டாகும்.

தக்ஷிணகைலாச மாண்மியத்தில்
இலங்கையிலுள்ள தேவஸ்தானங்களும்,
திருக்கேதீஸ்வர உத்பத்தி விபவங்களுங்கூறிய
உ-வது. அத்தியாயம் முற்றிற்று.

———o———

## மூன்றும் அத்தியாயம்

அகஸ்தியமகாமுனிவருக்குத் தவச்சித்தி கொடுத்தது.

சூதமகாமுனிவர் நைமிசாரண்ணிய வாசிகளைப் பார்த்துப் பின்னுஞ் சொல்லுகிறார் ஓ இருஷிகளே!

முன்னொருகாலத்திலே அகஸ்தியர் முதலிய இருஷிகணங்களெல்லாரும இமயமலையில் நடைபெற்ற பார்வதி பரமேஸ்வரர்களுடைய திருக்கலியாணத்தைத் தரிசிக்கச் சென்றிருந்தனர். அப்பொழுது வடதுருவந்தாழ்ந்து தென்துருவம் உயர்ந்தது. அதனால் யாவரும் பயந்தமை கண்டு பூமியைச் சமப்படுத்துவதிலதி சாதுரியம்படைத்த அகஸ்தியமகாமுனிவரைச் சிவபெருமான் பின்வருமாறு பணித்தனர்.

"ஓ அகஸ்தியமுனிவனே உனக்கு இத திருக்கல்யாணக்கோலத்தை வேதாரண்ணியத்திலும், தக்ஷிண கைலாசமாகிய திரிகூடத்துக் கணித்தாயுள்ள கரஜாக்ஷேத்திரத்திலேயும் காண்பிக்கின்றேன். ஆண்டுச்செல்லுதி"யென்று சிவபெருமான் கூறியருளினர்.

அதன்பின்பு, அகஸ்தியர் தக்ஷிண கைலாசத்தில் கோணேசதர்சனமும், கரஜையில் கல்யாணசுந்தர தர்சனமும் ஸர்வதீர்த்தேஸ்வர நாம லிங்கப் பிரதிட்டையுஞ்செய்து வரம்பெற்றுக்கொண்டு, அங்குநின்றும் புறப்பட்டுத் தவச்சித்திபெற வேணவாவுடையராய்த் திருக்கேதீஸ்வரத்தை நோக்கிப்போவாராயினர். அவ்வாறு சென்ற அகஸ்தியமகாமுனிவர் மிகவிருப்பத்தோடு (சாஸ்திரங்களிற் கூறப்பட்ட பிரகாரம்) பாலாவியாற்றிலே பஞ்சாங்க ஸ்நானஞ்செய்து, திருக்கேதீஸ்வரப் பிரபுவை யஹாக்நியாலுவிதிப்படி அபிஷேகம் பூஜை அர்ச்சனைகளைச் செய்து சிரசின்மேல் அஞ்சலியஹஸ்தராய் நின்றுகொண்டு பரமசிவனை ஸ்தோத்திரஞ் செய்கின்றார்.

### ஸ்தோத்திர தசகம். 10.

(சுலோகம்) "கைலாசவாஸின் கௌரீஸ ஸரணாகதவத்ஸல,
ஸ்ரீமத் துவஷ்ட்ர புராதீஸ பாஹிமாமீஸ்வரப் பிரபோ. 1

கணேஸ ஸ்கந்த ஜநக விருஷவாஹந ஸங்கர,
ஸ்ரீமத் துவஷ்ட்ர புராதீஸ பாஹிமாமீஸ்வரப் பிரபோ. 2
ஸாமகாநப் பிரியாநந்த சந்ர ஸூர்யாக்கினி லோசன,
ஸ்ரீமத் துவஷ்ட்ர புராதீஸ பாஹிமாமீஸ்வரப் பிரபோ. 3
ஸர்வலோகாநந்த ரூப காலகால விநாஸந,
ஸ்ரீமத் துவஷ்ட்ர புராதீஸ பாஹிமாமீஸ்வரப் பிரபோ. 4
பிரம்ஹ விஷ்ண் வம்ஸரூபாத்மன் விந்துநாதமயப்பிரபோ,
ஸ்ரீமத் துவஷ்ட்ர புராதீஸ பாஹிமாமீஸ்வரப் பிரபோ. 5
ஸச்சிதாநந்த ரூபேஸ ஷாட்குண்ணிய பரமேஸ்வர,
ஸ்ரீமத் துவஷ்ட்ர புராதீஸ பாஹிமாமீஸ்வரப்பிரபோ. 6
பஸூ பாஸ பரிச்சேத பஸூநாம் நாயகப் பிரபோ,
ஸ்ரீமத் துவஷ்ட்ர புராதீஸ பாஹிமாமீஸ்வரப் பிரபோ. 7
காமேஸ கருணாலிங்கோ காமிதார்த்த பலப்பிரத,
ஸ்ரீமத் துவஷ்ட்ர புராதீஸ பாஹிமாமீஸ்வரப்பிரபோ. 8
நமஸ்தே விஸ்வரூபாய நமஸ்தே விஸ்வ நாயகீ,
நமஸ்தே வாமதேவாய நமஸ் திரிபுரஸுந்தரீ. 9
அபராத ஸஹஸ்ராணி க்ரியந்தே ஹர்நிஸம்மயா,
தாஸோயமிதிமாம்மத்வா க்ஷம்மியே தாமீஸ்வரீஸ்வரௌ.

இதன்பொருள்.

கைலாசவாசரே! கௌரியம்மைக்கு நாயகரே! தஞ்சமானவருக்குப் பட்சமானவரே! விநாயகர் சுப்பிரமணியர்களுக்குப் பிதாவே! இடபவாகனரே! சுபத்தைச் செய்பவரே! ஸாமவேத கீதப்பிரியரே! ஆநந்தரூபரே! சந்திர சூரியாக்கினிகளைக் கண்களாகவுடையவரே! எல்லாவுலகங்கட்குமானந்தத்திருமேனியானவரே! காலனைக்காய்ந்தவரே! பிரம் விஷ்ணுவுருத்திரரூபரே! விந்துநாதவடிவினரே! ஸச்சிதானந்தரூபரே! பகவானே! பரமேஸ்வரா! பசுக்களுடைய பாஸப்பிணிப்பையறுப்பவரே! ஆன்மநாயகரே! பிரபுவே, காமேஸரே, கருணைக்கடலே, அடியார் விரும்பியபலனையீபவரே, பெருமைபொருந்திய துவட்டாபுரத்துக்கதிபதியே, ஈசுவரனே, என்னைக்காத்தருளுக, காத்தருளுக, விஸ்வரூபரே, உமக்கு நமஸ்காரம். விஸ்வநாயகீ உமக்கு நமஸ்

காரம். வாமதேவரே, உமக்கு நமஸ்காரம் திரிபுரஸௌந்தரீ உமக்கு நமஸ்காரம். என்னால் நாடோறும் அனேகம் குற்றங்கள் செய்திருக்கக் கூடும். தலைவனும் தலைவியுமாகிய நீவிர் தமியேனை இவன் நமது அடியானென்று கருதி, அவற்றைப் பொறுத்தருள்வீர்களாக.

என்று அகஸ்தியமகாமுனிவர் மிகுந்தபத்தியோடும் தோத்திரஞ் செய்தார். இவ்வாறு சிலகாலந் தபசு செய்துகொண்டிருந்து, தாமும் புதிதாக வோராலயம் வேதாகமவிதிப்படி நிருமாணஞ்செய்து, ஸ்ரீகண்டேஶ்வரனென்னு நாமத்துடனோரிலிங்கத்தையும் பிரதிஷ்டைசெய்து, ஆஸனம், ஆவாகனம், பாத்தியம், அர்க்கியம், ஆசமநீயம், பூதசுத்தி, தானசுத்தி, மந்திரசுத்தி, திரவியசுத்தி, லிங்கசுத்திகளுடன் சோடசோபசாரக்கிரமமாகப் பூஜைசெய்து தோத்திரம் பண்ணுகின்றார்.

அகஸ்தியமுனிவர்:—(சுலோகம்).

"நமஶ்ஶிவாய ஸாம்பாய ஸகுணாய ஸநந்திநே,
கணேஶ ஸ்கந்த தாதாய ஸ்ரீகண்டேஶாயதே நமஹ. 1

ஆதிநாதாய ஶாந்தாய நாதாந்த நிலயாயச,
கங்காதராய ஶுத்தாய ஸ்ரீகண்டேஶாயதே நமஹ. 2

ஸச்சிதாநந்த ரூபாய ஷாட்குண்ணிய பரிபூரித,
சந்திரஸூரியாக்கினிநேத்திராய ஸ்ரீகண்டேஶாயதே நமஹ

பஞ்சகிருத்திய பரேஶாய பரமாநந்த தாயிநே,
பாராஶக்தி ஸௌமித்திராய ஸ்ரீகண்டேஶாயதே நமஹ. 4

விருஷாங்க விருஷபாரூட பஸ்மோத்தூளித விக்கிரஹ,
சந்திரசூடாய நித்தியாய ஸ்ரீகண்டேஶாயதே நமஹ 5

திரிபுரக்கினாய ரௌத்திராய திரிநேத்திராய திரிஶூலிநே,
திரிலோகபரிரக்ஷாய ஸ்ரீகண்டேஶாயதே நமஹ. 6

ஆதிமத்தியாந்த ஹீநாய ஆதார நிலயாய ச,
ஆதிவ்யாதி விமுக்தாய ஸ்ரீகண்டேஶாயதே நமஹ. 7

ஆதிதேவ மஹாதேவ அஸ்மத் குலஸௌதீபக,
திவத்கடாக்ஷாத்வயம் தந்நியா ஸ்ரீகண்டேஶாயதே நமஹ.

நமஸ்தே விஸ்வநாதாய நமஸ்தே ஜகதம்பிகே,
மமாபராதம் ஸர்வம்து க்ஷம்மியே தாம் ஜகதீஸ்வரௌ. 9

இதன்பொருள்.

சிவனே! அம்பிகாபதியே, சகுணரூபரே, நந்திதலைவ, விநாயக சுப்பிரமணியர்களுக்குப்பிதாவே, ஆதிதலைவரே, இந்திரியவய முடையவரே, நாதமுடிவிலிருப்பவரே, கங்கையைத்தரித்த வரே, சுந்தரரே, சச்சிதானந்தவடிவினரே, அறுகுணமுடைய வரே பரிபூரணரே, முச்சுடர்களைக்கண்களாய்க் கொண்டவரே ஐந்தொழில் நடாத்துபவரே, பரமானந்தங்கொடுப்பவரே, பாச பக்திநற்றுணைவரே, இடபக்கொடியுடையவரே இடபவாகனரூ டரே, வெண்ணீற்று மேனியரே, சந்திரசூடரே, நித்தியரே, முப்புரமழித்தவரே, உருத்திரரே, முக்கண்ணரே, முத்தலைச் சூலமுடையாரே, மூவுலகுங் காத்தருள்புரிபவரே, ஆதிநடு வீறற்றவரே, ஆதாரநிலையரே, மனவியாகுலத்தைத் தீர்ப்பவரே, முதற்கடவுளே, பெருந்தேவரே, எங்கள் குலத்தைநன்கு விள க்குபவரே, தேவரீரது கிருபாகடாக்ஷத்தினால் யாம் தன்னியர் களாயினோம். திருநீலகண்டத்தலைவரே, விஸ்வநாதா, உமக்கு நமஸ்காரம். உலகமாதாவே உமக்கு நமஸ்காரம். சர்வலோக பிதாவும் சர்வலோக மாதாவுமாகிய நீவிர் யான்செய்த தப்பி தங்களையெல்லாம் உபசமனஞ்செய்து, என்னைக் காத்துக்கொ ள்வீர்களாக."

இந்தத் தோத்திரத்தினாலே தயாநிதியாகிய பரமசிவன் சந்தோஷித்து, அந்த லிங்கத்தின்மேலாவிர்ப்பவித்து அகஸ்தி யமகாமுனிவருக்கு விரும்பிய வரமாகிய தவச்சித்தியை யீந் தருளி சர்வலோகஹிதப்பிரதாராய் மேலும் அவ்விலிங்கத்தில் அந்தர்த்தானமாயினார். கும்பயோனியும் தாம் விரும்பிய வரம்பெற்றுக்கொண்டு பொதியமலையை யடைந்தார்.

தக்ஷிண கைலாசமான்மியத்தில்
அகஸ்தியமகாமுனிவருக்குத்தவச்சித்திகொடுத்த
ரு—வது. அத்தியாயம் முற்றிற்று.

———0———

# உத்தரபீடிகை.

இவ்வாற்றால் இவ்விலங்காதேசத்திலே வடமர்காணத்தைச் சார்ந்த மாதோட்டப் பகுதியில் திருக்கேதீஸ்வரமென்னுந் தேவமந்திர மூவாதென்றும், அஃது பக்குவான்மாக்கட்கு கோசரமாயும் அபக்குவான்மாக்கட்கு அகோசரமாயும் விளங்குகிறதென்றூகிக்கப்படுகிறது. மேலும் "றோயல் ஏஷியாட்டிக் சொசைற்றி" என்னுஞ் சங்கத்தாருடைய 10-ம் இலக்கப் புத்திரிகையில் Mr. Boaks. C. C. S. "என்பவர் இலங்கையில் மாதோட்டத்தில் கடல்புடைசூழ்ந்த திருக்கேதீஸ்வரமென்றழைக்கப்படுமிடம், மிகப்பழைய சைவக்கோயிலினுடைய அடையாளங்களைக் கொண்டிருக்கிறதென்று ஸ்ரீசுந்தரமூர்த்திஸ்வாமி தேவாரமொழிபெயர்ப்புங் கூறி அத்தாக்ஷிப்" படுத்தியிருக்கிறார்.

மேலும், மாதோட்டத்திலும் அதற்கருகாமையிலுமுள்ள கிராமவாசிகளான கத்தோலிக்கரும் வன்னிநாட்டாரு மிதனையே திருக்கேதீஸ்வரமென்று தமது மூதாதைகள் பாரம்பரியமாகக் கூறிவந்ததாகவும் "சிலகாலத்துக்குமுன் ஓர் பதிகன் இக்கேதீஸ்வரத்திலே தங்கியவழி ஆகாயமளாவிய திருக்கோயிலையும் திருக்கூட்டத்தையும் திருவிளாத்திருநாளையும் சேரிற்றரிசித்து ஏனையோர்க்குங் காணபித்தனன்" என்பதோரிதிகாசமுங் கூறுவர். இன்னும்பலவுள.

இவ்வற்புதங்களைச் செவிமடுத்த கத்தோலிக்கக் குருமார் மலையைப்போல விக்கினையும் தம் வசமாக்கப் பன்முறை முயன்றனரெனினும், விறலிற்றீயினன் பாலிற்படு செய்யினனுக்கு நெடுங்காலம் அத்தலத்திடை மறைந்து நின்றற்புதஞ் செய்து கொண்டிராநின்ற அத்திருக்கேதீஸ்வரக் கடவுள் தாம் கோயில்கொண்டருளத் திருவுளம்பற்றிச் சைவசமயிகளிடத்திலும் மெஸ். துவைனங்குரையிடத்துங் கிருபாநோக்கஞ்செய்தனர். அதன்பயனாக அத்தலம் யாழ்ப்பாணம் நாட்டுக்கோட்டை நகரத்தாருளொருவரான, ராம. அரு. அரு. பழனியப்பச்செட்டியார் மூலமாக சென்ற விஜயஞு கார்த்திகைமீ உகூ (1893 டிசம்பர் 13) யாழ்ப்பாணக்கச்சேரியில் அரசாக்ஷியாரிடமிருந்து பிரசித்த ஏலத்தில் மூவாயிரத்தொருநூறு (3100) ரூபாவாக விலைக்கு வாங்கப்பட்டு நம்சைவசமயிகள்வசமாயிற்று ஐயஞு ஆனிமீ கவ உ தே. மூ. பசுபதிச்செட்டியார் மூலமாகப் பெருந்திரளான பணஞ் செலவுசெய்யப்பட்டுப் பழைய கட்டிடங்களும் கிணறுகளுங்கண்டுபிடிக்கலாயின. சோபகிருதுஞு ஆவணிமீ (1903ல்) ஸ்ரீ. குமாரஸ்வாமி தீக்ஷிதரால் ஆலயம் சிவலிங்கம் நந்தி பலிபீடங்கள்

ஜீர்ணோத்தாரமாயின. சோபகிருது வரு ஆனிமீ ௧௪உ (ஜூன் 27) ஙரி யாலிங்கமும் தேவியும் பிரதிஷ்டை செய்யப்பட்டன. அது தொடக்கம் இவ்வாலயம் மாதம்பை நகரத்தார் விசாரணையிலும், காலயுக்திவரு மாசிமீ ௧௮உ (1919 மார்ச்சு-1) தொடக்கம் கொழும்பு, யாழ்ப்பாணம் நகரத்தார்களது விசாரணையிலும் செவ்வனே நடைபெற்று வருகிறது.

மேலும், இத்தேவஸ்தானத்தில் அனேக மண்டபங்களும் திருமதில்களும் கோபுரங்களும், விக்கினேஸ்வரர் சுப்பிரமணியர் வைரவர் கோயில்களும், அக்கிரகாரம் மடம் அன்னசத்திரங்களும், கூபங்களும், குளங்களும் அங்கங்கே யமைக்கப்படவேண்டி யிருக்கின்றன, இத்தேவாலயத்திருப்பணிகளை நடாத்த லக்ஷக்கணக்கான திரவியம் தேவையாயிருக்கிறது. கோயிற்பிரகாரங்களுக்காகவும் கட்டிடங்களுக்காகவு மரசாக்ஷியாரிடம் இன்னும் நிலம்பெறவேண்டியிருக்கிறது, ஜனங்களைக்குடியிருத்தவேண்டும். இதற்கணித்தாய் "ஜயன்ஸ்ருங்கு" என்னுங்கட்டுக்கரைக் குளமிருக்கிறது: இதிலிருந்து மாதோட்டப்பகுதிக்கு இருபோகவேளாண்மைக்குப் போதியஜலம் கிடைக்கிறது, பாலாவிக்குளத்தைக் கட்டி கட்டுக்கரைக்குளத்து ஜலத்தை விட்டுக்கொண்டால் திருக்கேதீஸ்வரத்துக்கு ஜலத்தட்டுப்பாடு நேரிடமாட்டாது,

இத்திருக்கேதீஸ்வரம்: கோட்டைமன்னாருக்குத் தென்கீழ்த்திசையில் 5 மயில் தூரத்திலுள்ளது. இதற்குத் தென்மேற்றிசையில் 2½ மயிலில் தங்கலென்னுமிடத்தில் திருக்கேதீஸ்வரம் என்னுமபிதானத்துடன் புகைரதந் தங்குமிடமுண்டு. இதிற் பகலில் பிரயாணஞ் செய்வோர் காலையிலும் மாலையிலும் போக்குவரவு செய்யலாம். இதிலும் இதற்குத்தெற்கிலும் கிழக்கிலும் குடியிருக்க வசதியான நிலமும், நீர்வளமுமுண்டு.

சின்னுட்பல்பிணிச் சிற்றறிவினராகிய நம்மாந்தர்இவற்றையெல்லாமுய்த்துணர்ந்து "காதற்றவூசியும் வாராதுகாணுங் கடைவழிக்கே" என்றபெரியோருரை மேற்கொண்டு இப்பெருந் தருமவிஷயங்களிற் றலையிட்டுப் புண்ணியஸ்தல வாசமும் கேதீஸ்வரநக்ஷிரகமும் குன்றாதபுகழும் நிலைபெற்ற செல்வமும் ஆன்மலாபமும் பெற்றுக் கொள்வார்களாக, சுபம்! சுபம்,!!

க, சு. வை.